


அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003




# முதுகலை முதலாமாண்டு இரண்டாம் பருவம்

# பக்தி இலக்கியம்


## முனைவர் சொ. அருணன்

உதவிப் பயிற்றுநர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

| கூறு: 3 | பொய்கையாழ்வார் – முதல் திருவந்தாதி – ‘நின்று நிலம் அங்கை நீர் ஏற்று’ என்று தொடங்கும் பாடலிலிருந்து 10 பாடல்கள் (21–30). பூதத்தாழ்வார் – இரண்டாம் திருவந்தாதி – ‘தாம் உளரே தம் உள்ளம் உள் உளதே’ என்று தொடங்கும் பாடலிலிருந்து 10 பாடல்கள் (21–30). பேயாழ்வார் – மூன்றாம் திருவந்தாதி – ‘பேசுவார் எவ்வளவு பேசுவர்’ என்று தொடங்கும் பாடலிலிருந்து 10 பாடல்கள் (21–30). நம்மாழ்வார் – திருவாய்மொழி – முதற்பத்து – ‘உயர்வு அற உயர்நலம்’ என்று தொடங்கும் 11 பாடல்கள். |
|---|---|
| கூறு: 4 | குலசேகராழ்வார் – பெருமாள் திருமொழி – ‘ஊனேறு செல்வத்து’ என்று தொடங்கும் 11 பாடல்கள். பெரியாழ்வார் – திருமொழி – முதற்பத்து- முதல் திருமொழி – ‘வண்ண மாடங்கள்’ என்று தொடங்கும் 10 பாடல்கள். தொண்டரடிப்பொடியாழ்வார் – திருமாலை – ‘காவலிற் புலனை வைத்து’ என்று தொடங்கும் 11 பாடல்கள். திருமங்கையாழ்வார் – பெரிய திருமொழி – முதற்பத்து – ‘வாடினேன் வாடி’ என்று தொடங்கும் 10 பாடல்கள். |
| கூறு: 5 | காரைக்காலம்மையார் – திருவிரட்டை மணிமாலை – 20 பாடல்கள். ஆண்டாள் – நாச்சியார் திருமொழி – ‘வாரணமாயிரம்’ என்று தொடங்கும் 11 பாடல்கள் – ‘கருப்பூரம் நாறுமோ’ என்று தொடங்கும் 10 பாடல்கள். |

# பொய்கையாழ்வார்




வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் முதலாழ்வார் பொய்கையாழ்வார் ஆவார். காஞ்சிபுரத்தில் ஐப்பசி மாதம் திருவோணம் நட்சத்திரத்தில் திருவெஃகா எனும் பகுதியில்லுள்ள சொன்னவண்ணம் செய்த பெருமாள் கோவிலில் உள்ள பொய்கையில் பிறந்தவர்.

# பொய்கையாழ்வார்




இவரால் அந்தாதியாகப் பாடப்பட்ட நூறு பாடல்களும் முதல் திருவந்தாதி எனப்படுகின்றது. முதன்முதலில் விஷ்ணுவின் பத்து அவதாரங்களையும் பாடியவர். சில ஆழ்வார்கள் திருமாலின் கையில் உள்ள ஆறு ஆயுதங்களில் ஒன்றின் அம்சமாகப் பிறந்தவர் கள் என்பது வைணவ கொள்கை. இதன்படி பொய்கையாழ்வார் பாஞ்சஜன்யம் எனப்படும் புனித சங்கின் அம்சம் ஆவார்.

# பொய்கையாழ்வார்




இவர் பேயாழ்வார், பூதத்தாழ்வார் எனும் ஆழ்வார்களுடன் ஒரே காலத்தில் வாழ்ந்தவராவார். இவர்கள் மூவரும் ஞான, பக்தி, வைராக்கியங்கள் மிக்க துறவறம் பூண்டு, ஆண்டவனின் நினைவிலேயே உருகி உள்ளம் கனியப் பாடியவர்கள். உண்டியே உடையே என உகந்தோடும் மக்களோடு கலவாமல் ஒரு நாள் இருந்த இடத்தில் ஒரு நாள் இராமல் ஒருவரை ஒருவர் அறியாமல் தனித்தனியே சஞ்சரித்துக் கொண்டிருந்தனர்.

# பொய்கையாழ்வார்




இறைவன், இவர்களால் உலகை உய்விக்க கருதித் திருக்கோவலூரில், ஒரு வீட்டின் இடைகழியில் மழை பெய்யும் ஒரு நாள் இரவில் ஒருங்கிணைத்தான். எவ்வாறெனில், தனித்தனியாகத் தலயாத்திரை மேற்கொண்ட மூன்று ஆழ்வார்களும் திருக்கோவலூரில் ஒரே சமயத்தில் நுழைய பெருமழை உண்டானது. மழைக்கு ஒதுங்கும் பொருட்டு ஒரு குடிசையை நெருங்க அவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் அமரலாம், மூவர் நிற்கலாம் எனும் அளவில் இருக்க இம்மூவரும் அங்குச் சிறிது நின்றுகொண்டிருக்க நான்காமவராக இருந்து இருளில் நெருக்கத்தை உண்டுபண்ணினான் இறைவன்.

# பொய்கையாழ்வார்




நெருக்கத்தின் காரணத்தை அறிய வேறு விளக்கின்மையால், பொய்கையார் பூமியாகிற தகழியில்(அகல்) கடல்நீரை நெய்யாகக் கொண்டு சூரியனை விளக்காக ஏற்றினார். பூதத்தார் அன்பாகிய தகழியில்(அகல்) ஆர்வத்தை நெய்யாகக் கொண்டு சிந்தையாகிய திரியில் ஞானவிளக்கை ஏற்றினார். இவ்விரண்டின் ஒளியால் இருள் அகல, நெருக்கத்திற்குக் காரணமான இறைப்பொருளைக் கண்டார்.

# பொய்கையாழ்வார்




பின் மூவரும் அப்பொருளின் சொரூபத்தை அறிந்து அனுபவித்து ஆனந்தம் எய்தினர்.இவ்வரலாற்றின் உட்பொருள் யாதெனில் பொய்கையாரின் செயல் புற இருள் நீக்கியது, பூதத்தார் செயல் அக இருளை நீக்கியது. அக இருள், புற இருள் இவ்விரண்டும் நீங்கினால் பரமனைக் காணலாம். ஆக முதல் இரண்டு ஆழ்வார்கள் செயல்கள் அக, புற இருள் நீக்க பேயாழ்வார் இறைவனின் வடிவழகை அன்பெனும் வெளிச்சத்தில் கண்டார் என்பதாம்.

# பொய்கையாழ்வார்




அவ்வானந்தம் உள்ளடங்காமல் மேலே வழிந்து செய்யுள் வடிவமாக வெளி வரலாயிற்று. அச்செய்யுள் தொகுதியே முறையே முதல் திருவந்தாதி (பொய்கையாருடையது), இரண்டாம் திருவந்தாதி (பூதத்தாருடையது), மூன்றாம் திருவந்தாதி (பேயாருடையது) எனப்பெயர் பெற்றன. இறைவனின் நாடகம் உண்மையில் நடந்தது என்று இந்து சமயத்தார் நம்புவதற்கு இம்மூன்று திருவந்தாதிகளிலுள்ள பாடல்களே முக்கிய சான்றுகளாகின்றன.

# முதல் திருவந்தாதி

நின்று நிலம் அங்கை நீர் ஏற்று மூவடியால்

சென்று திசை அளந்த செங்கண் மாற்கு என்றும்

படை ஆழி புள் ஊர்தி பாம்பு-அணையான் பாதம்

அடை ஆழி நெஞ்சே அறி (21) 2101

**பதவுரை:—நின்று**—(மாவலியினருகில்) நின்று, **நிலம்**—பூமியை, **அம் கை**—அழகிய கையினால், **நீர் ஏற்று**—தானம் வாங்கி, **மூ அடியால்**—மூன்று அடிகளாலே, **சென்று திசை அளந்த**—நடந்தபடி சென்று திக்குகளையெல்லாம் அளந்து கொண்ட, **செம் கண் மாற்கு**—சிவந்த கண்களையுடைய ஸர்வாதிகனுக்கு, **என்றும்**—எக்காலத்திலும், **படை**—ஆயுதம், **ஆழி**—சக்கரம்; **புள்**—கருடாழ்வான், **ஊர்தி**—வாஹனம்; **ஆழி நெஞ்சே**—கம்பீரமான மனமே! **அறி**—(இதைக்) கேட்பாயாக:—. **பாம்பு அணையான்**—திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய எம்பிரானுடைய, **பாதம்**—திருவடிகளை, **அடை**—அடைந்திடுவாயாக.

# முதல் திருவந்தாதி

அறியும் உலகு எல்லாம் யானேயும் அல்லேன்-

பொறி கொள் சிறை உவணம் ஊர்ந்தாய் வெறி கமழும்

காம்பு ஏய் மென்தோளி கடை வெண்ணெய் உண்டாயைத்

தாம்பே கொண்டு ஆர்த்த தழும்பு (22) 2102

**பதவுரை:— பொறி கொள் சிறை** — பல வர்ணங்களை யுடைய சிறகுகளைக் கொண்ட, **உவணம்**—கருடாழ்வானை. **ஊர்ந்தாய்**—ஏறி நடத்துமவனும், **வெறி கமழும்** — மணம் வீசப்பெற்றவளும், **காம்பு ஏய் மென் தோளி** மூங்கிலை ஒத்த மெல்லிய தோளை உடையவளுமான யசோதைப் பிராட்டி யினால், **கடை வெண்ணெய்**—கடையப்பட்ட வெண்ணெயை, **உண்டாயை**—அமுது செய்தவனை உன்னை, **தாம்பே கொண்டு**—ஒரு சிறு கயிற்றையே கொண்டு, **ஆர்த்த**— கட்டினதாலுண்டான, **தழும்பு** — தழும்பை, **யானேயும் அல்லேன்**-நான் ஒருவனே அறிபவனல்லேன்; **உலகெல்லாம் அறியும்**—உலகத்திலுள்ளவர்களெல்லாரும் அறிவார்கள்.

# முதல் திருவந்தாதி

தழும்பு இருந்த சார்ங்க நாண் தோய்ந்தவாம் அங்கை

தழும்பு இருந்த தாள் சகடம் சாடி தழும்பு இருந்த-

பூங்கோதையாள் வெருவ பொன் பெயரோன் மார்பு இடந்த

வீங்கு ஓத வண்ணர் விரல் (23) 2103

**பதவுரை:— அம் கை**—அழகிய கைகளில், **சார்ங்க நாண்**—சார்ங்கவில்லின் நாணி, **தோய்ந்த**—படிந்ததினுலேற்பட்ட, **தழும்பு**—தழும்பானது. **இருந்த ஆம்**—இருக்கின்றனவாம்; **தாள்**—திருவடிகளில், **சகடம் சாடி**—சகடாஸுரனை உதைத்ததினுலுண்டான, **தழும்பு இருந்த**—அடையாளம் இருக்கின்றது; **பூம் கோதையாள்**—அழகிய மயிர்முடியையுடைய பிராட்டி, **வெருவ** — (உலகுக்கு என் வருமோ என்று) அஞ்சும்படியாக, **பொன் பெயரோன்**—ஹிரண்யன் என்ற பெயரையுடைய அஸுரனுடைய, **மார்பு இடந்த**—மார்பைப் பிளந்த, **வீங்கு ஓத வண்ணர்**—பெருகும் அலைகளையுடைய கடலைப்போன்ற திருநிறத்தையுடைய எம்பெருமானுடைய, **விரல்**—திருவிரல்களிலே, **தழும்பு இருந்த** — தழும்புகள் இருக்கின்றன.

# முதல் திருவந்தாதி

விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு ஆய்ச்சி

உரலோடு உறப் பிணித்த நான்று குரல் ஓவாது

ஏங்கி நினைந்து அயலார் காண இருந்திலையே?

ஓங்கு ஓத வண்ணா உரை (24) 2104

**பதவுரை**:—**விரலொடு வாய் தோய்ந்த**—உன்னுடைய விரல்களிலும் வாயிலும் படிந்திருந்த, **வெண்ணெய்**—வெண்ணெயை. **ஆய்ச்சி**—யசோதைப்பிராட்டி, **கண்டு**–பார்த்து, **உரலோடு**–உரலுடன், **உறப் பிணித்த நான்று**–நன்றாகக் கட்டி வைத்தபோது, **குரல் ஓவாது**–அழுகுரல் நீங்காமல், **ஏங்கி**–ஏங்கிக்கொண்டு, **நினைந்து**-(அப்போதும்) வெண்ணெய் திருடுவதை நினைத்துக்கொண்டு, **அயலார்**–மற்றவர்களெல்லாரும், **காண**—வேடிக்கை பார்க்கும்படி, **இருந்திலையே**—இருக்கவில்லையா? **ஓங்கு ஓத வண்ணா**—கிளர்ந்தெழுந்த அலைகளையுடைய கடல்போன்ற திருமேனியை உடையவனே! **உரை**-நீயே உண்மையைச் சொல்.

# முதல் திருவந்தாதி

உரை மேற்கொண்டு என் உள்ளம் ஓவாது எப்போதும்

வரைமேல் மரகதமே போலத் திரைமேல்

கிடந்தானை கீண்டானை கேழலாய்ப் பூமி

இடந்தானை ஏத்தி எழும் (25) 2105

**பதவுரை:—வரைமேல்**-மலையின்மேலே, **மரதகமே போல**-மரதகமணி பதிந்திருப்பது போல, **திரை மேல்**—பாற்கடலின் மேலே, **கிடந்தானை**—பள்ளிகொண்டவனாய், **கேழலாய்**—வராஹரூபியாய், **பூமி**—உலகத்தை, **கீண்டானை**— (அண்டபித்தியில் நின்றும்) ஒட்டு விடுவித்து, **இடந்தானை**—எடுத்தவனை எம்பிரானை, **என் உள்ளம்**—என்மனமானது, **ஓவாது**-இடைவிடாமல், **எப்போதும்**—எல்லாக் காலத்திலும், **உரை மேற்கொண்டு**—உரைப்பதில் ஈடுபட்டு, **ஏத்தி**-(அவனுடைய கலயாணகுணங்களைப்) புகழ்ந்து, **எழும்**-உய்ந்துபோகும்.

# முதல் திருவந்தாதி

எழுவார் விடைகொள்வார் ஈன் துழாயானை

வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்

வினைச் சுடரை நந்துவிக்கும் வேங்கடமே - வானோர்

மனச் சுடரைத் தூண்டும் மலை (26) 2106

**பதவுரை**:—**எழுவார்**—(செல்வத்தைப் பெற்று) அகலு
மவர்களான ஐச்வர்யார்த்திகளும். **விடை கொள்வார்**—(எம்
பெருமானைவிட்டு நித்யமாகப்) பிரிந்துபோகும் கைவல்
யார்த்திகளும். **ஈன் துழாயானை**—இனிய துழாய்மாலையை
யுடைய எம்பெருமானை. **வழுவா வகை நினைந்து**—பிரியாம
லிருக்கவேண்டுமென நினைத்து; **வைகல்**—தினந்தோறும்.
**தொழுவார்**—வணங்குமவர்களான பகவத் ப்ராப்திகாமர்களு
மாகிய இம்மூவருடைய. **வினைச் சுடரை**—(அவரவர்களுடைய
ப்ராப்யத்துக்கு விரோதியான) பாபத்தீயை. **நந்துவிக்கும்**—
அவிக்கும். **வேங்கடமே**—திருவேங்கடமலையே; **வானோர்**—நித்ய
ஸூரிகளுடைய. **மனச் சுடரை**—திருவுள்ளமாகிற விளக்கை,
**தூண்டும் மலை**—தூண்டுகின்ற மலையாகும்.

# முதல் திருவந்தாதி

மலையால் குடை கவித்து மா வாய் பிளந்து

சிலையால் மராமரம் ஏழ் செற்று கொலை யானைப்

போர்க் கோடு ஒசித்தனவும் பூங் குருந்தம் சாய்த்தனவும்-

கார்க் கோடு பற்றியான் கை (27) 2107

**பதவுரை:—மலையால்**— கோவர்த்தினகிரியைக்கொண்டு, **குடை கவித்து**—குடையாகக் கவித்தும், **மா வாய் பிளந்து**—குதிரையாய் வந்த கேசி என்னும் அஸுரனின் வாயைப் பிளந்தும், **சிலையால்**—வில்லாலே, **மராமரம் ஏழ் செற்று**—ஏழு மராமரங்களையும் துளைத்தும், **கொலை யானை**—கொல்லுவதற்காக நிறுத்தின யானையின், **போர் கோடு ஒசித்தனவும்**—சண்டை செய்யும் தந்தங்களை ஒடித்தவையும், **பூங்குருந்தம் சாய்த்தனவும்**—பூத்த குருந்தமரத்தைத் தள்ளினவையும், **கார் கோடு**—மேகம்போல் முழங்கும் சங்கத்தை, **பற்றியான்**—பிடித்தவனுடைய, **கை**—திருக்கைகளேயாகும்.

# முதல் திருவந்தாதி

கைய வலம்புரியும் நேமியும் கார் வண்ணத்து

ஐய மலர்மகள் நின் ஆகத்தாள் செய்ய

மறையான் நின் உந்தியான் மா மதிள் மூன்று எய்த

இறையான் நின் ஆகத்து இறை (28) 2108

**பதவுரை:—கார்**—மேகம் போன்ற, **வண்ணத்து**—திரு நிறத்தையும் ஸ்வபாவத்தையுமுடைய, **ஐய**—எம்பிரானே! **வலம்புரியும்**—ஸ்ரீபாஞ்சஜந்யமும், **நேமியும்**—திருவாழியாழ் வானும், **கைய**—கையிலிருக்கின்றன; **மலர் மகள்**—பூவில் அவதரித்த பெரிய பிராட்டியார், **நின்**—உன்னுடைய, **ஆகத்தாள்**—திருமார்பில் இருக்கிறாள்; **செய்ய மறையான்**— உன்னைக் காட்டுகையாகிற செம்மையையுடைய வேதத்தை ஓதும் நான்முகன், **நின்**—உன்னுடைய, **உந்தியான்**—திரு நாபியிலே பிறந்தவன்; **மா மதிள்**—பெரிய மதிள்களை உடைய, **மூன்று**—முப்புரங்களையும், **எய்த**—அம்பெய்து அழித்தவனாய், **இறையான்**—தன்னை ஈச்வரனாக அபிமானித்திருக்கும் ருத்ரன், **நின் ஆகத்து**—உன்னுடைய திருமேனியில், **இறை**—ஒரு மூலையைப் பற்றிக் கிடக்கிறவன்.

# முதல் திருவந்தாதி

இறையும் நிலனும் இரு விசும்பும் காற்றும்

அறை புனலும் செந்தீயும் ஆவான் பிறை மருப்பின்

பைங்கண் மால் யானை படு துயரம் காத்து அளித்த

செங்கண் மால் கண்டாய் தெளி (29) 2109

**பதவுரை:—இறையும்**—பரமபதநாதனாகவும், **நிலனும்**—பூமியும், **இரு விசும்பும்**—பரந்த ஆகாசமும், **காற்றும்**—வாயுவும், **அறைபுனலும்**-சப்தியாநிற்கும் ஜலமும், **செந்தீயும்**-சிவந்த அக்னியுமாகவும், **ஆவான்**—ஆகின்றவன், **பிறை மருப்பில்**—இளஞ்சந்திரன் போன்ற தந்தத்தையும், **பைம் கண்**—அழகிய கண்களையுமுடையதான, **மால் யானை**—பெருத்த யானையுடைய, **படு துயரம்**—பெரும் துயரத்தை, **காத்து**—போக்கி, **அளித்த**—ரக்ஷித்த, **செம் கண் மால் கண்டாய்**—செந்தாமரைக்கண்ணனை பரமபுருஷன்கிடாய்; **தெளி**—(மனமே!) இதை நன்றாக அறி.

# முதல் திருவந்தாதி

தெளிது ஆக உள்ளத்தைச் செந்நிறீஇ ஞானத்து

எளிது ஆக நன்கு உணர்வார் சிந்தை எளிது ஆகத்

தாய் நாடு கன்றே போல் தண் துழாயான் அடிக்கே

போய் நாடிக்கொள்ளும்-புரிந்து (30) 2110

**பதவுரை :—** **தெளிதாக**—கலக்கம் நீங்கும்படியாக, **உள்ளத்தை**—மனஸ்ஸை, **செம் நிறீஇ**—நன்கு நிறுத்தி, **ஞானத்து**—ஞானத்தாலே, **எளிதாக**—ஸுலபமாக, **நன்கு உணர்வார்**—நன்றாக அறிபவர்களுடைய, **சிந்தை**—மநஸ்ஸானது, **எளிதாக** ஸுலபமாக, **தாய்நாடு**—(பசுக்கூட்டத்தின் இடையே உள்ள தன்) தாயை அடைகிற, **கன்றே போல்**—கன்றுக்குட்டியைப் போல், **தண் துழாயான் அடிக்கே**—குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடைய ஸர்வேச்வரனுடைய திருவடிகளையே, **புரிந்து**—விரும்பி, **போய்**— அடைந்து, **நாடிக் கொள்ளும்**—சேர்ந்து கொள்ளும்.

# பூதத்தாழ்வார்



வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் இரண்டாவது ஆழ்வார் பூதத்தாழ்வார் ஆவார். மாமல்லபுரத்தில் பிறந்த இவர் வைணவ நூல்களின் தொகுப்பான நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களில் உள்ள இரண்டாம் திருவந்தாதியைப் பாடியுள்ளார். இது நூறு வெண்பாக்களால் ஆனது.

# பூதத்தாழ்வார்



திருமாலின் கையில் உள்ள ஐந்து ஆயுதங்களில் ஒன்றான கௌமோதகி என்னும் பெயருடைய கதாயுதத்தின் அம்சமாக இவர் பிறந்தார் என வைணவம் நம்புகின்றது. திருமாலின் மீது இவர் கொண்ட பக்தியைக் காட்டும் இவரது பாடல்களிலே இவருடைய தமிழ்ப் பற்றும் புலப்படுகின்றது.



# பூதத்தாழ்வார்

பக்திப் பெருக்கினால் பாடிய அச்செய்யுள் தொகுதியே முறையே முதல் திருவந்தாதி (பொய்கையாருடையது), இரண்டாம் திருவந்தாதி (பூதத்தாருடையது), மூன்றாம் திருவந்தாதி (பேயாருடையது) எனப்பெயர் பெற்றன. இறைவனின் நாடகம் உண்மையில் நடந்தது என்று நம்புவதற்கு இம்மூன்று திருவந்தாதிகளிலுள்ள பாடல்களே முக்கிய சான்றுகளாகின்றன.

# இரண்டாம் திருவந்தாதி

2202 தாமுளரே தம்முள்ளம் உள்ளுளதே, தாமரையின்

பூவுளதே யேத்தும் பொழுதுண்டே, - வாமன்

திருமருவு தாள்மருவு சென்னியரே, செவ்வே

அருநரகம் சேர்வ தரிது. 21

- திரு மருவுதாள் - அழகிய திருவடிகளை
- மருவு - பணிவதற்குப் பொருத்தமான
- சென்னியரே - தலையையுடையவர்களாக இருக்கின்றார்களே;
- செவ்வே - நேராக
- அருநரகம் - கொடிய நரகத்தை

# இரண்டாம் திருவந்தாதி

2203 அரிய தெளிதாகும் ஆற்றலால் மாற்றி,

பெருக முயல்வாரைப் பெற்றால், - கரியதோர்

வெண்கோட்டு மால்யானை வென்றுமுடித் தன்றே,

தண்கோட்டு மாமலரால் தாழ்ந்து? 22

- பெருக முயல்வாரை - மிகவும் உத்ஸாஹங் கொண்டிருக்கின்ற மஹாபுருஷனான எம்பெருமானை
- பெற்றால் - கிடைக்கப்பெற்றால்
- அரியது - செய்வதற்கு அருமையான செயலும்
- மால் - பெரிய
- கரியது ஓர் யானை - கருநிறமுள்ள கஜேந்திராழ்வான்

# இரண்டாம் திருவந்தாதி

2204 தாழ்ந்துவரங் கொண்டு தக்க வகைகளால்

வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும், - தாழ்ந்த

விளங்கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய், ஞாலம்

அளந்தடிக்கீழ்க் கொண்ட அவன். 23

- தாழ்ந்த - (பழத்தின் கனத்தினால் கிளைகள்) தாழ்ந்து கிடந்த
- விளா - விளாமரத்தினுடைய
- கனிக்கு - பழங்களை உதிர்ப்பதற்காக
- கன்று - கன்றை (எறிகோலாகக் கொண்டு) வீசியெறிந்தவனாயும்
- வேறு உரு ஆய் -(திருமாலான தன்னுடைய வடிவத்தை விட்டு யாசகனான வாமன மூர்த்தி வடிவமாய்

# இரண்டாம் திருவந்தாதி

2205 அவன்கண்டாய் நன்னெஞ்சே.ஆரருளும் கேடும்,

அவன்கண்டா யைம்புலனாய் நின்றான், - அவன்கண்டாய்

காற்றுத்தீ நீர்வான் கருவரைமண் காரோத,

சீற்றத்தீ யாவானும் சென்று. 24

- நல்நெஞ்சே - நல்ல மனமே!
- ஆர் அருளும் - பரிபூர்ணக்ருபையாலே உண்டாகக்கூடிய மோக்ஷமும்
- கேடும் - நிக்ரஹத்தால் வரக்கூடியதான ஸம்ஸாரமும்
- கருவரை - கறுத்த மலைகளும்
- (அவன் கண்டாய்) - அவனேயாம்;

# இரண்டாம் திருவந்தாதி

2206 சென்ற திலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்,

கொன்ற திராவணனைக் கூறுங்கால், - நின்றதுவும்

வேயோங்கு தண்சாரல் வேங்கடமே, விண்ணவர்தம்

வாயோங்கு தொல்புகழான் வந்து. 25

- விண்ணவர் தம்வாய் - தேவர்களின் வாயினால்
- ஓங்குதொல் புகழான் - உயர்வாகக் கூறப்படுகின்ற பழமையான புகழையுடைய எம்பெருமான்
- செவ்வே - நேராக
- சென்றது - சீறிச்சென்றது
- இலங்கை மேல் - லங்காபுரியின் மேலாகும்;

# இரண்டாம் திருவந்தாதி

2207 வந்தித் தவனை வழிநின்ற ஐம்பூதம்

ஐந்தும் அகத்தடக்கி யார்வமாய், - உந்திப்

படியமரர் வேலையான் பண்டமரர்க் கீந்த,

படியமரர் வாழும் பதி. 26

- படி அமரர் - நிலத்தேவரான பிராமணர்கள்
- வாழும் - நித்யவாஸம் பண்ணுகிற
- பதி - திருப்பதியாகிய திருமலையென்பது,
- வழிநின்ற - (எம்பெருமானை ஆச்ரயிப்பதற்குத் தடங்கலாய்) குறுக்கே நிற்பனவான
- ஐம்பூதம் ஐந்தும் - பஞ்சபூதங்களையும் பஞ்சேந்திரியங்களையும்

# இரண்டாம் திருவந்தாதி

2208 பதியமைந்து நாடிப் பருத்தெழுந்த சிந்தை,

மதியுரிஞ்சி வான்முகடு நோக்கி - கதிமிகுத்தங்

கோல்தேடி யாடும் கொழுந்ததே போன்றதே,

மால்தேடி யோடும் மனம். 27

- பதி - திருமலைத் திருப்பதியிலே
- அமைந்து - வேரூன்றி நின்று
- நாடி - எங்கேயென்று தேடிக்கொண்டு
- பருத்து எழுந்த சிந்தை - மிகவும் வளர்ந்து மேற்கிளர்ந்த மனோரதத்தையுடையதாய்
- மதி உரிஞ்சி - சந்திரபதத்தையும் உராய்ந்து கொண்டு

# இரண்டாம் திருவந்தாதி

2209 மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான், மற்றும்

நினைப்பரிய நீளரங்கத் துள்ளான், - எனைப்பலரும்

தேவாதி தேவ னெனப்படுவான், முன்னொருநாள்

மாவாய் பிளந்த மகன். 28

- எனை பலரும் - கணக்கில்லாத வைதிக புருஷர் யாவராலும்
- தேவாதி தேவன் எனப்படுவான் - தேவர்கட்கும் தேவவென்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படா நிற்பவனும்
- மாகடலான் - பரந்த திருப்பாற் கடலிலே பள்ளி கொண்டிருப்பவனும்
- முன் ஒரு நாள் - முன்பொருகாலத்தில்

# இரண்டாம் திருவந்தாதி

2210 மகனாகக் கொண்டெடுத்தாள் மாண்பாய கொங்கை,

அகனார வுண்பனென் றுண்டு, - மகனைத்தாய்

தேறாத வண்ணம் திருத்தினாய், தென்னிலங்கை

நீறாக எய்தழித்தாய் நீ. 29

- தென் இலங்கை - அழகிய லங்காபுரி
- நீறு ஆக - நீறாகியொழியும்படி
- எய்து - அம்புகளைச் செலுத்தி
- அழித்தாய் - முடித்தவனே!

# இரண்டாம் திருவந்தாதி

2211 நீயன் றுலகளந்தாய் நீண்ட திருமாலே,

நீயன் றுலகிடந்தா யென்பரால், - நீயன்று

காரோதம் முன்கடைந்து பின்னடைத்தாய் மாகடலை,

பேரோத மேனிப் பிரான். 30

- பேர் ஓதம் மேனி பிரான் - பெரிய கடல் போன்ற திருமேனியையுடைய பெருமானே!
- நீண்ட திருமாலே - எண்ணுதற்கு அரிய பெருமை படைத்த திருமாலே
- நீ - இப்படிப்பட்ட நீ
- அன்று - முன்பொருகால்
- உலகு - உலகங்களை

# பூதத்தாழ்வார்



வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் பேயாழ்வார் ஒருவர், முதல் ஆழ்வார்கள் எனப்படும் மூன்று ஆழ்வார்களுள் ஒருவர். திருமயிலை என வழங்கிய மயிலாப்பூரைச் சேர்ந்தவர். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள் எனப்படும் வைணவ நூல்களின் தொகுப்பில் உள்ள மூன்றாம் திருவந்தாதியைப் பாடியவர் இவராவார், இது நூறு வெண்பாக்களைக் கொண்டது.

# பூதத்தாழ்வார்



பேயாழ்வார் நந்தகம் எனப்படும் வாளின் அம்சம் கொண்டவர். இந்து சமயத்தின் பிரிவுகளான சைவம், வைணவம் என்பவற்றுக் கிடையே போட்டி நிலவிய கால கட்டத்தில், இவ்விரு சமயப் பிரிவுகளிடையே ஒற்றுமை காண விழைந்தவர் பேயாழ்வார் எனக் கருதப்படுகிறார். இவர் பாடிய பாசுரங்களிலே இதற்குச் சான்றுகள் உள்ளன. எடுத்துக்காட்டாக ஒரு பாசுரம்:

# பூதத்தாழ்வார்



தாழ் சடையும் நீள் முடியும்

ஒண் மழுவும் சக்கரமும்,

சூழ் அரவும் பொன் நாணும்

தோன்றுமால் --சூழும்

திரண்டு அருவி பாயும்

திருமலைமேல் எந்தைக்கு,

இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து.

# மூன்றாம் திருவந்தாதி

பேசுவார்* எவ்வளவு பேசுவர்,* அவ்வளவே

வாச மலர்த்துழாய் மாலையான்,* - தேசுஉடைய

சக்கரத்தான்* சங்கினான் சார்ங்கத்தான்,* பொங்குஅரவ

வக்கரனைக் கொன்றான் வடிவு. 1

# மூன்றாம் திருவந்தாதி

தேச உடைய சக்கரத்தான் - தேஜ்ஸ்ஸையுடைய திருவாழியை ஏந்தினவனும்

சங்கினான் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையவனும்

சார்ங்கத்தான் - சார்ங்கவில்லையுடையவனும்

பேசுவர் - பேசுகின்றார்களோ

அவ்வளவே - அவ்வளவேயாம்.

# மூன்றாம் திருவந்தாதி

வடிவுஆர் முடிகோட்டி* வானவர்கள்,* நாளும்

கடிஆர் மலர்தூவி* காணும் - படியானை,*

செம்மையால் உள்உருகி* செவ்வனே நெஞ்சமே,*

மெய்ம்மையே காண விரும்பு. 2

# மூன்றாம் திருவந்தாதி

வானவர்கள் - நித்யஸூரிகள்

வடிவு ஆர் - அழகு பொருந்திய

முடி - கிரீடங்களை

கோட்டி - தாழ்த்தி

கடி ஆர் மலர் - மணம் பொருந்திய புஷ்பங்களை

# மூன்றாம் திருவந்தாதி

விரும்பி விண் மண்அளந்த* அஞ்சிறைய வண்டுஆர்*

சுரும்பு தொளையில் சென்றுஊத,* அரும்பும்

புனந்துழாய் மாலையான்* பொன்அம் கழற்கே,*

மனம்துழாய் மாலாய் வரும். 3

# மூன்றாம் திருவந்தாதி

வண்தார் - அழகிய மாலையிலே

அம் சிறைய சுரும்பு - அழகிய சிறகுகளையுடைய வண்டுகள்

துளையில் சென்று ஊத - ரஸநாடியிலே படிந்துஊத (அதனால்)

அரும்பும் - அரும்புகள் உண்டாகப்பெற்ற

புனம் துழாய் மாலையான் - நல்ல திருத்துழாய் மாலையை அணிந்தவனான எம்பெருமானுடைய

# மூன்றாம் திருவந்தாதி

வருங்கால் இருநிலனும்* மால்விசும்பும் காற்றும்,*

நெருங்கு தீ* நீர்உருவும் ஆனான்,* - பொருந்தும்

சுடர்ஆழி ஒன்றுஉடையான்* சூழ்கழலே,* நாளும்

தொடர்ஆழி* நெஞ்சே! தொழுது. 4

# மூன்றாம் திருவந்தாதி

ஆழி நெஞ்சே - கம்பீரமான மனமே!

இரு நிலனும் - விசாலமான பூமியும்

மால் விசும்பும் - அளவிறந்த ஆகாசமும்

காற்றும் - வாயுவும்

நெருங்கு தீ - செறிந்த தேஜஸ்ஸும்

# மூன்றாம் திருவந்தாதி

தொழுதால் பழுதுஉண்டே* தூநீர் உலகம்,*

முழுதுஉண்டு மொய்குழலாள் ஆய்ச்சி,* - விழுதுஉண்ட-

வாயானை* மால்விடைஏழ் செற்றானை,* வானவர்க்கும்

சேயானை* நெஞ்சே! சிறந்து? 5

# மூன்றாம் திருவந்தாதி

முழுது - முழுவதும்

உண்டு - திருவயிற்றிலே வைத்தவனாயும்

மொய் குழலாள் ஆய்ச்சி - அழகிய கூந்தலையுடையளான யசோதையினுடைய

விழுது - வெண்ணெயை

உண்ட வாயானை - அமுதுசெய்த வாயையுடையவனாயும்

# மூன்றாம் திருவந்தாதி

சிறந்த என் சிந்தையும் செங்கண் அரவும்,*

நிறைந்தசீர் நீள்கச்சி உள்ளும்,* - உறைந்ததுவும்,

வேங்கடமும் வெஃகாவும்* வேளுக்கைப் பாடியுமே*

தாம்கடவார் தண் துழாயார். 6

# மூன்றாம் திருவந்தாதி

நீள் - பெரிய

கச்சியுள்ளும் - கச்சித்திருப்பதியும்

வேங்கடமும் - திருமலையும்

வெஃகாவும் - திருவெஃகாவும்

வேளுக்கைப் பாடியுமே - திருவேளுக்கைத் திருப்பதியுமாம்.

# மூன்றாம் திருவந்தாதி

ஆரே துயர் உழந்தார்* துன்புஉற்றார் ஆண்டையார்,*

காரே மலிந்த கருங்கடலை,* நேரே

கடைந்தானை* காரணனை, நீர்அணைமேல்* பள்ளி

அடைந்தானை நாளும் அடைந்து? 7

# மூன்றாம் திருவந்தாதி

கார் மலிந்த கரு கடலே - மேகங்கள் நிறைந்த பெரிய கடலை

நேரே கடைந்தானை - தானே முன்னின்று கடைந்தவனும்

நாரணனை - ஸகல ஜகத்காரண பூதனும்

துன்பு உற்றார் ஆர் - துக்கங்களை அநுபவித்தவர்கள் யார்? (ஒருவருமில்லை) (அப்படிப்பட்டவர்கள்)

ஆண்டையார் - எங்கிருக்கிறார்கள்? (எங்குமில்லை)

# மூன்றாம் திருவந்தாதி

அடைந்தது அரவுஅணைமேல்* ஐவர்க்குஆய் அன்று

மிடைந்தது* பாரத வெம்போர்,* - உடைந்ததுவும்

ஆய்ச்சிபால் மத்துக்கே* அம்மனே, வாள்எயிற்றுப்*

பேய்ச்சிபால் உண்ட பிரான் 8

# மூன்றாம் திருவந்தாதி

பேய்ச்சி - பூதனையினுடைய

ஐவர்க்கு ஆய் - பஞ்சபாண்டவர்களுக்காக

உண்ட - உண்டு அவளை முடித்தவனான

பிரான் - ஸ்வாமியானவன்

அடைந்தது - பள்ளிக்கொண்டது

# மூன்றாம் திருவந்தாதி

பேய்ச்சிபால் உண்ட* பெருமானைப் பேர்ந்துஎடுத்து,*

ஆய்ச்சி முலைகொடுத்தாள் அஞ்சாதே,* வாய்த்த

இருள்ஆர் திருமேனி* இன்பவளச் செவ்வாய்த்,*

தெருளா மொழியானைச் சேர்ந்து. ௯

# மூன்றாம் திருவந்தாதி

சேர்ந்து - கிட்டி

ஆய்ச்சி - யசோதையானவன்

பேர்ந்து எடுத்து - வாரியெடுத்தணைத்து கொண்டு

அஞ்சாதே - சிறிதும் பயப்படாமல்

முலை கொடுத்தான் - தன் முலையை உண்ணக் கொடுத்தான்.

# மூன்றாம் திருவந்தாதி

சேர்ந்த திருமால்* கடல்குடந்தை வேங்கடம்*

நேர்ந்தஎன் சிந்தை நிறைவிசும்பு,* - வாய்ந்த

மறைபாடகம் அனந்தன்* வண்துழாய்க் கண்ணி,*

இறைபாடி ஆய இவை. 10

# மூன்றாம் திருவந்தாதி

குடந்தை - திருக்குடந்தை யென்ன

வேங்கடம் - திருமலையென்ன

நேர்ந்த என் சிந்தை - நேர்பட்ட எனது ஹ்ருதயமென்ன

நிறை விசும்பும் - பரம்பின பரமபதமென்ன

வாய்ந்த மறை - அமைந்த வேதமென்ன

# நம்மாழ்வார்



நம்மாழ்வார் எனப்படும் மாறன் சடகோபன் தமிழ்நாட்டில், தூத்துக்குடி மாவட்டம் ஆழ்வார் திருநகரியில் பிறந்தார்.[1][2] இவர் வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். நான்கு வேதங்களையே தீந்தமிழில் பாடியதால் "வேதம் தமிழ் செய்த மாறன்" என்றே புகழ்ப்படுகிறார். கம்பர் இயற்றிய "சடகோபர் அந்தாதி" எனும் நூலின் தலைவனும் இச்சடகோபனே ஆவார்.

# நம்மாழ்வார்



திருநெல்வேலி சீமையில் தாமிரபரணி கரையிலுள்ள திருக்குருகூர் என்னும் ஊரில் பொற்காரியார் மற்றும் சேர நாட்டு திருவெண்பரிசாரத்தை ஆண்ட மன்னனின் மகளான உடைய நங்கைக்குத் திரு மகனாராக நம்மாழ்வார் கலி பிறந்த 43-ஆவது நாளில் அவதரித் தார். இவர் பாண்டிய மரபினர் ஆதலால் மாறன் என்ற இயற்பெயரையும் மாயையை உருவாக்கும் "சட" எனும் நாடியை விஷ்வக்சேனரின் அம்சமாகப் பிறந்த இவர் வென்றதால் "சடகோபன்" என்றும் மாறன் சடகோபன் என அழைக்கப்பட்டார்.

# நம்மாழ்வார்



யானையை அடக்கும் அங்குசம் போலப் பரன் ஆகிய திருமாலைத் தன் அன்பினால் கட்டியமையால் "பராங்குசன்" என்றும், தலைவியாகத் தன்னை வரித்துக் கொண்டு பாடும்போது "பராங்குசநாயகி" என்றும் அழைக்கப்படுகிறார். பதினாறு ஆண்டுகள் திருக்குருகூர் நம்பி கோவிலின் புளிய மரத்தின் அடியில் எவ்வித சலனமும் இல்லாமல் தவம் செய்து வந்தார்.

# நம்மாழ்வார்



வடதிசை யாத்திரை மேற்கொண்டிருந்த மதுரகவி என்பவர் அயோத்தியில் இருந்தபோது தெற்குத் திசையில் ஓர் ஒளி தெரிவதைக் கண்டு அதனை அடைய தென்திசை நோக்கிப் பயணித்தார். மாறனிடமிருந்தே அவ்வொளி வருவதை அறிந்து அவரைச் சிறு கல் கொண்டு எறிந்து விழிக்க வைத்தார்.

# நம்மாழ்வார்



சடகோபனின் ஞானத்தாலும், பக்தியாலும் கவரப்பெற்று அவருக்கே அடிமை செய்தார் என்பது வரலாறு. மாறன் கண்விழித்த உடன் மதுரகவி ஆழ்வார் கேட்ட "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" கேள்விக்கு "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று பதில் அளித்தார் நம்மாழ்வார்

# நம்மாழ்வார்



நம்மாழ்வார் இயற்றிய பாசுர நூல்கள் நான்கு: திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி திருவாய்மொழி இவை ரிக், யசுர், அதர்வண மற்றும் சாம வேதத்தின் சாரமாக அமைந்திருப்பதாகப் பெரியோர்கள் சொல்வார்கள். இந்தத் திருவாய்மொழியில் 1102 பாசுரங்களும், திருவிருத்தம் நூலில் 100 பாசுரங்களும், திருவாசிரியம் நூலில் 8 பாசுரங்களும் பெரிய திருவந்தாதி நூலில் 87 பாசுரங்களும் என நான்கு பிரபந்தங்களில் ஆயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றாறு பாசுரங்களை இசைத்துள்ளார்.

# நம்மாழ்வார்



கண்ணிநுண்சிறுத்தாம்பு, வைணவ சமயத்தில் நம்மாழ்வாரைப் போற்றி மதுரகவியாழ்வாரால் இயற்றப்பட்ட நூலாகும். இந்நூல் 11 தனியன்களைக் கொண்டது. மதுரகவியாழ்வாரால் நம்மாழ்வாரை வணங்கிப் பாடப்பட்ட இந்நூல் நாலாயிர திவ்யபிரபந்தம் தொகுப்பில் முதாலாயிரம் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

# திருவாய்மொழி

நூறு பாசுரங்கள் கொண்டதொரு தொகுதியைப் ‘பத்து’ என்றும், பத்துப் பாசுரங்கள் கொண்ட பதிகத்தைத் ‘திருவாய்மொழி’ என்றும் வழங்குவர்; ‘பத்துப்பாட்டு ஒரு திருவாய்மொழியாய், பத்துத் திருவாய்மொழி ஒரு பத்தாய், இப்படிப் பத்தான ஆயிரம்’ (2.3:11.) என்ற வியாக்கியானம் காண்க. இம்முறையில், முதற்பத்து என்பதற்கு முதல் நூறு பாசுரங்கள் என்றும், முதல் திருவாய் மொழி என்பதற்கு முதல் பத்துப் பாசுரங்கள் என்றும் கொள்க. இங்ஙனமே பின் வருவனவற் றிற்கும் பொருள் கொள்க. இப்பதிகம் நாற்சீர் நாலடியான் வருதலின் கலி விருத்தம் எனப்படும்.

# திருவாய்மொழி

உயர்வற உயர்நலம் உடையவன் யவன்அவன்

மயர்வற மதிநலம் அருளினன் யவன்அவன்

அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன்அவன்

துயரறு சுடரடி தொழுதுஎழுஎன் மனனே. 1

# திருவாய்மொழி

என் மனமே, தேவர்கள் முதலிய மற்றையோருடைய மேன்மைகள் முழுதும் இல்லை என்று கூறலாம்படி மேன்மேல் உயர்ந்துகொண்டே செல்லுகின்ற நற்குணங்களையுடையவன் யாவனோ அவன், என்னிடத்துள்ள அறிவின்மையாவும் நீங்க, பத்தியின் நிலையை அடைந்த அறிவைத் தந்தான்;

# திருவாய்மொழி

அந்த அறிவைத் தந்தவன் யாவனோ அவன், மறதி என்பது சிறிதும் இல்லாத நித்தியசூரிகட்குத் தலைவன்; அந்நித்தியசூரிகட்குத் தலைவன் யாவனோ அவனுடைய, எல்லாத் துன்பங்களையும் நீக்குகின்ற ஒளி பொருந்திய திருவடிகளைத்தொழுது பிறவிப் பெருங்கடலினின்றும் கரை ஏறுவாய்.

# திருவாய்மொழி

அந்த அறிவைத் தந்தவன் யாவனோ அவன், மறதி என்பது சிறிதும் இல்லாத நித்தியசூரிகட்குத் தலைவன்; அந்நித்தியசூரிகட்குத் தலைவன் யாவனோ அவனுடைய, எல்லாத் துன்பங்களையும் நீக்குகின்ற ஒளி பொருந்திய திருவடிகளைத்தொழுது பிறவிப் பெருங்கடலினின்றும் கரை ஏறுவாய்.

# திருவாய்மொழி

மனன்அகம் மலம் அற  மலர்மிசை எழுதரும்

மனன் உணர்வு அளவு இலன்,  பொறி உணர்வு அவை இலன்

இனன் உணர், முழு நலம்,*  எதிர் நிகழ் கழிவினும்

இனன் இலன் எனன் உயிர்,  மிகுநரை இலனே. 2

# திருவாய்மொழி

‘மனத்தின் குற்றங்கள் எல்லாம் நீங்க, பின்பு மலர்ந்து மேலே எழுகின்ற மனத்தினுடைய யோக ஞானத்தால் அறியப்படுகின்ற ஆத்துமாவின் தன்மையினையுடையவன் அல்லன்; இந்திரியங்களால் அறியப்படுகின்ற உலகத்துப் பொருள்களின் தன்மையினையுடையவன் அல்லன்; எதிர்வு நிகழ்வு இறப்பு என்னும் முக்காலங்களிலும் தனக்கு ஒத்தாரை இல்லாதவன்; மிக்காரையும் இல்லாதவன்; ஞான ஆனந்தமயமாக இருப்பவன்; இத்தகைய இறைவன் என்னுடைய சிறந்த உயிர் ஆவான்’ என்றவாறு.

# திருவாய்மொழி

இலன் அது உடையன் இது* என நினைவு அரியவன்*

நிலனிடை விசும்பிடை* உருவினன் அருவினன்*

புலனொடு புலன் அலன்,* ஒழிவு இலன் பரந்த* அந்-

நலன் உடை ஒருவனை* நணுகினம் நாமே.* 3

# திருவாய்மொழி

‘அதனை இல்லாதவன்; இதனையுடையவன்,’ என்று இரு தன்மையாலும் நினைக்க முடியாதவன்; காணப்படுகின்ற இவ்வுலகமும் ஆகாயத்திலுள்ள தெய்வலோகங்களும் முதலாக எல்லா உலகங்களிலுமுள்ள உயிரல் பொருள்களை எல்லாமுடையவன்; காணப்படுகின்ற எல்லாப்பொருள்களும் தானாக இருப்பவன்; அவ்வாறு இருப்பினும், அப்பொருள்களின் குணங்களும் குற்றங்களும் தன்னைச் சாராமல் இருப்பவன்; இவ்வகையில் எல்லாப்பொருள்களையும் விட்டு நீங்காதவனாகி எங்கும் பரந்திருக்கின்ற அந்நற்குணங்களையுடைய ஒப்பற்ற இறைவனை நாம் சேர்ந்தோம்.

# திருவாய்மொழி

நாம் அவன் இவன் உவன்,* அவள் இவள் உவள் எவள்*

தாம் அவர் இவர் உவர்,* அது இது உது எது*

வீமவை இவை உவை,* அவை நலம், தீங்கு அவை*

ஆமவை ஆயவை ஆய்* நின்ற அவரே.* 4

# திருவாய்மொழி

நாம்’ என்ற பெயர்ப்பொருளும், ‘அவன் இவன் உவன்’ என்னும் ஆண்பாற்பெயர்ப்பொருள்களும், ‘அவள் இவள் உவள் எவள்’ என்னும் பெண்பாற்பெயர்ப்பொருள்களும், தாம் அவர் இவர் உவர்’ என்னும் பலர்பாற்பெயர்ப்பொருள்களும், ‘அது இது உது எது’ என்னும் ஒன்றன்பாற்பெயர்ப்பொருள்களும், அழிகின்ற அந்தப் பொருள்களும் இந்தப் பொருள்களும் உந்தப் பொருள்களும், நல்ல பொருள்களும் தீய பொருள்களும், உண்டாகும் பொருள்களும் உண்டான பொருள்களும் ஆகி நிற்கின்ற எல்லாப்பொருள்களும் அவ்விறைவரேயாவர் என்றவாறு.

# திருவாய்மொழி

அவரவர் தமதமது* அறிவு அறி வகைவகை*

அவரவர் இறையவர்* என அடி அடைவர்கள்*

அவரவர் இறையவர்* குறைவு இலர் இறையவர்*

அவரவர் விதிவழி* அடைய நின்றனரே. 5

# திருவாய்மொழி

அவரவர் தங்கள் தங்கள் ஞானத்தால் அறியும் வகைவகையான தெய்வங்களை நம் தெய்வங்களாக அடி பணிவார்கள். அந்த அந்த தெய்வங்களும் குறையில்லாதவர்கள்தாம். அவர்களுடைய விதிமுறை களின் வழியாக அத்தெய்வங்களை அடையமுடியும். இந்த நேரடியான அர்த்தத்தை வைணவ சம்பிரதாயம் ஒத்துக்கொள்வதில்லை. தங்கள் தங்கள் அறிவினால் அறியப்படுகிற மற்ற தெய்வங்களைத் தொழுதாலும் பலன் பெறலாம். ஆனால் அவரவர் விதிவழி அடையச் செய்வது அந்த தெய்வங்களினுள்ளும் அந்தர்யாமியாய் நிற்கும் திருமாலே என்றுதான் அர்த்தம் சொல்வார்கள்.

# திருவாய்மொழி

நின்றனர் இருந்தனர்* கிடந்தனர் திரிந்தனர்*

நின்றிலர் இருந்திலர்* கிடந்திலர் திரிந்திலர்*

என்றும் ஓர் இயல்வினர்* என நினைவு அரியவர்*

என்றும் ஓர் இயல்வொடு* நின்ற எம் திடரே. 6

# திருவாய்மொழி

நிற்றல், நில்லாமை; இருத்தல் இராமை; கிடத்தல், கிடவாமை; திரிதல், திரியாமை' என ஒன்றுக்கு ஒன்றுமாறுபட்ட தொழில்களையுடையவர் ஆதலால், எப்பொழுதும் ஒரே தன்மையினையுடையவர் என நினைத்தற்கு அரியவர்; அப்படி நினைப்பதற்கு அரியவர் என்னும் தன்மை எப்பொழுதும் மாறுபடாமல் ஒரே நிலையோடு கூடியிருக்கின்றவர்; வேதங்களால் பரம்பொருள் இவனே என்று உறுதி செய்யப்பட்ட திடத்தையுடையவர்; அவர் என் தலைவர் ஆவர்.

# திருவாய்மொழி

திட விசும்பு எரி வளி* நீர் நிலம் இவைமிசைப்*

படர் பொருள் முழுவதும் ஆய்* அவைஅவைதொறும்*

உடல்மிசை உயிர் எனக்* கரந்து எங்கும் பரந்துளன்*

சுடர் மிகு சுருதியுள்* இவை உண்ட சுரனே. 7

# திருவாய்மொழி

உலகங்களை எல்லாம் முடிவு காலத்தில் அழியச் செய்த இறைவன், திடமான ஆகாயமும் நெருப்பும் காற்றும் நீரும் நிலமும் ஆகிய இவற்றைக் காரணமாகக் கொண்டு படர்ந்த எல்லாப் பொருள்களும் தானேயாகி, அவ்வப்பொருள்கள்தோறும் உடலுக்குள் இருக்கின்ற உயிரைப்போன்று மறைந்து, எங்கும் பரந்தவனாய் ஒளிமிக்க வேதத்துள் தோன்றுகின்றவன் ஆவான்.

# திருவாய்மொழி

சுரர் அறிவு அரு நிலை* விண் முதல் முழுவதும்*

வரன் முதலாய் அவை* முழுது உண்ட பரபரன்*

புரம் ஒரு மூன்று எரித்து* அமரர்க்கும் அறிவியந்து*

அரன் அயன் என* உலகு அழித்து அமைத்து உளனே. 8

# திருவாய்மொழி

பிரமன் முதலிய தேவர்களாலும் அறிய அரிதான நிலையினையுடைய மூலப்பகுதி தொடக்கமாகவுள்ள எல்லாவற்றிற்கும் சிறந்த காரணமாகி, பின் அவற்றை எல்லாம் அழித்த பரபரன், சிவனாக இருந்து ஒப்பற்ற முப்புரங்களையும் எரித்து அழித்துப் பின் உலகங்களை எல்லாம் அழித்தும், பிரமனாக இருந்து தேவர்கட்கு ஞானத்தை உபதேசித்துப் பின் ஒரு காலத்தில் உலகத்தை எல்லாம் படைத்தும், அவ்விருவருடைய உயிர்களுக்குள் உயிராகத் தங்கியிருக்கின்றான்.

# திருவாய்மொழி

உளன் எனில் உளன் அவன்* உருவம் இவ் உருவுகள்*

உளன் அலன் எனில், அவன்* அருவம் இவ் அருவுகள்*

உளன் என இலன் என* இவை குணம் உடைமையில்*

உளன் இரு தகைமையொடு* ஒழிவு இலன் பரந்தே. ೯

# திருவாய்மொழி

இறைவன் உளன் என்றால் உள்ளவன் ஆவான்; அப்பொழுது உருவத்தோடு இருக்கும் இப்பொருள்கள் எல்லாம் அவனுடைய தூல சரீரமாகும். இறைவன் இலன் என்றாலும் உள்ளவனே யாவான்; அப்பொழுது உருவம் இல்லாதனவாய் இருக்கும் இப்பொருள்கள் எல்லாம் அவனுடைய சூட்சும சரீரமாகும். ஆதலால், உளன் என்றும் இலன் என்றும் கூறப்படும் இவற்றைக்குணமாகவுடைமையின், உருவமும் அருவமும் ஆன தூல சூக்குமப் பொருள்களையுடையவனாய் எங்கும் ஒழிவு இல்லாதவனாகிப் பரந்து இருகின்றவனே ஆவான் என்பதாம்.

# திருவாய்மொழி

பரந்த தண் பரவையுள்*  நீர்தொறும் பரந்துளன்*

பரந்த அண்டம் இது என  நிலம் விசும்பு ஒழிவு அறக்*

கரந்த சில் இடந்தொறும்  இடம் திகழ் பொருள்தொறும்*

கரந்து எங்கும் பரந்துளன்  இவை உண்ட கரனே. 10

# திருவாய்மொழி

உலகங்களை எல்லாம் கற்பாந்தகாலத்து உண்டு காத்த தலைவன், பரந்திருக்கின்ற குளிர்ந்த சமுத்திரத்திலுள்ள நீர் அணுத்தோறும் பரந்திருக்கின்ற அண்டம் இது என்று கூறும்படி பரந்திருக்கின்றான்; அவ்வாறே பூமி ஆகாயம் இவற்றிலும் எங்கும் பரந்து நிறைந்திருக்கின்றான்; மிகவும் சூக்குமமான உடல்தோறும் அவ்வவ்வுடல்களில் வசிக்கின்ற உயிர்தோறும் கண்களுக்குத் தெரியாதவாறு பரந்திருக்கின்றான் என்றவாறு.

# குலசேகராழ்வார்




இவர் பிறந்த ஊர் கொல்லிநகரான கருவூர் திருவஞ்சிக்களம். ஸ்ரீராமபக்தர். பாரம்பரிய ஸ்ரீ வைஷ்ணவம், இவரது ஊரை "கொல்லிநகர்" அதாவது கருவூர் (கரூர்) என்கிறது. இவரது ஜென்ம நட்சத்திரம் புனர்பூசம். இவர் திருமாலின் மார்பில்இருக்கும் மணி (கௌஸ்துப) அம்சம் பொருந்தியவர். இவரும், மகளான சேரகுலவல்லி தாயாரும் அரங்கனையும், ராமனையுமே அடிபணிந்துவந்தனர். நாடு:கொங்கு நாடு, ஊர்; கரூர் வஞ்சி, மலை: கொல்லிமலை.

# குலசேகராழ்வார்




கொங்கர் கோமான் குலசேகரன் என்ற அடியின்மூலம், இவர் சங்க காலச் சேரர்கள் (கரூர்) மரபினர் என்று தெரிகிறது. இவரது தந்தையார் சந்திர குலத்து அரசரான திடவிரதர் என்பவராவார். குலசேகர ஆழ்வார் நால்வகைப் படை கொண்டு பகைவர்களை வென்று நீதிநெறி பிறழாமல் செங்கோல் செலுத்திக் கொல்லி நகரை அரசாண்டு வந்தார். தனதாட்சிக்குட்பட்ட கொடுந்தமிழ் மண்டலங்களான வேணாடு (திருவிதாங்கூர் பகுதி), குட்டநாடு (மலபார்), தென்பாண்டிநாடு (நெல்லை, தூத்துக்குடி, கன்னியாகுமரி பகுதிகள்) ஆகியவற்றின் தலங்களைச் தரிசித்துள்ளார்..

# குலசேகராழ்வார்




இவருக்கு இறைவன் காட்சி தந்தமையால் இன்பமும், செல்வமும், அரசாட்சியும் தமக்கு வேண்டாமென்று துறவினை மேற் கொண்டார். இவர் பெரிய பெருமாளாகிய ராமபிரானிடத்தில் அன்பு பூண்டவரானதால் இவருக்கும் 'குலசேகரப் பெருமாள்' என்றே பெயர் வழங்கலாயிற்று. திருவரங்கம் சென்று திருவரங்கப் பெருமானை வாயார வாழ்த்தி நின்று தம் அனுபவத்தைப் பாடியரு ளினார். இவருடைய பாடல்கள் பெருமாள் திருமொழி என்றழைக்கப்படும். இதனில் 31 பாசுரங்கள் திருவரங்கப் பெருமானைப் பற்றியது. இவர் திருவேங்கடம், திருக்கண்ணபுரம் முதலான திருத்தலங்களையும் பாடியுள்ளார்.

# குலசேகராழ்வார்




திருவரங்கம் பெரிய கோயிலில் மூன்றாவதாக இருக்கும் திருச்சுற்றிலே சேனைவென்றான் திருமண்டபம் என்பதைக் கட்டினார். இத்திருச்சுற்றையும் செப்பம் செய்தார். இதனாலேயே இம்மூன்றாவது சுற்றுக்கு இவரது பெயர் இன்றும் வழங்குகிறது. குலசேகராழ்வாரால்தான் ”பவித்ரோற்சவ மண்டபம்” கட்டப்பட்டது. இந்த மண்டபம் உள்ள பிராகாரத்தைத் திருப்பணி செய்தவரும் இவரே!.

# பெருமாள் திருமொழி

பெருமாள் திருமொழி என்னும் நூல் வைணவ ஆழ்வார்களுள் ஒருவராகிய குலசேகர ஆழ்வாரால் பாடப்பட்டது. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் ஒரு பகுதியாகிய இந்நூல், அத்தொகுப்பில் 647 தொடக்கம் 750 வரையான 105 பாடல்களைக் கொண்டது. 1. முதல் பதினோரு பாடல்களில் அரங்கப்பெருமானை கண்டு மகிழும் நாள் எந்நாளென வேண்டுவதாக அமைந்துள்ளது. நமக்கு நாலாம் திருமொழி பாடமாக அமைந்துள்ளது.

# பெருமாள் திருமொழி

நப்பின்னைப் பிராட்டியை மணப்பதற்காக ஏழு எருதுகளை வென்ற கண்ணனின் அடிமையாய் வாழும் நல்வாழ்க்கையை அன்றி வலிமை மிக்க உடலில் அருமையான அழகிய புஜங்களும் மார்புகளும் கொண்ட வீர வாழ்க்கையை நான் வேண்டேன். வளைந்திருக்கும் சங்கினைத் தன் இடக்கரத்தில் ஏந்தியிருக்கும் திருவேங்கடத்தானின் கோனேரித் தீர்த்தத்தில் வாழும் கொக்காய் பிறப்பேனே.

# பெருமாள் திருமொழி

நப்பின்னைப் பிராட்டியை மணப்பதற்காக ஏழு எருதுகளை வென்ற கண்ணனின் அடிமையாய் வாழும் நல்வாழ்க்கையை அன்றி வலிமை மிக்க உடலில் அருமையான அழகிய புஜங்களும் மார்புகளும் கொண்ட வீர வாழ்க்கையை நான் வேண்டேன். வளைந்திருக்கும் சங்கினைத் தன் இடக்கரத்தில் ஏந்தியிருக்கும் திருவேங்கடத்தானின் கோனேரித் தீர்த்தத்தில் வாழும் கொக்காய் பிறப்பேனே.

# பெருமாள் திருமொழி

அளவில்லாத செல்வத்துடன் அரம்பையர்களால் சூழப்பட்டு வானுலகத்தை ஆளும் பெரும் வாய்ப்பையும் மண்ணுலகத்தில் அரசாள்வதையும் நான் வேண்டேன். தேனால் நிரம்பியப் பூக்களைக் கொண்ட சோலைகள் உடைய திருவேங்கடத்தில் இருக்கும் நீர்ச்சுனையில் மீனாய்ப் பிறக்கும் பெரும் வாய்ப்பு உடையவன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

ஆனாத செல்வத்து* அரம்பையர்கள் தற் சூழ*

வான் ஆளும் செல்வமும் மண்-அரசும் யான் வேண்டேன்*

தேன் ஆர் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்

மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே 2

# பெருமாள் திருமொழி

அளவில்லாத செல்வத்துடன் அரம்பையர்களால் சூழப்பட்டு வானுலகத்தை ஆளும் பெரும் வாய்ப்பையும் மண்ணுலகத்தில் அரசாள்வதையும் நான் வேண்டேன். தேனால் நிரம்பியப் பூக்களைக் கொண்ட சோலைகள் உடைய திருவேங்கடத்தில் இருக்கும் நீர்ச்சுனையில் மீனாய்ப் பிறக்கும் பெரும் வாய்ப்பு உடையவன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

பின் இட்ட சடையானும்* பிரமனும் இந்திரனும்*

துன்னிட்டுப் புகல் அரிய* வைகுந்த நீள் வாசல்*

மின் வட்டச் சுடர்-ஆழி* வேங்கடக்கோன் தான் உமிழும்*

பொன்-வட்டில் பிடித்து உடனேபுகப் பெறுவேன் ஆவேனே 3

# பெருமாள் திருமொழி

பின்னலுடைய சடையணிந்த சிவபெருமானும் பிரமனும் இந்திரனும் விரைந்து உன்னைக் காண்பதற்காக வைகுந்தத் திருவாசலில் குழுமி நிற்கின்றனர். நீ மின்னலைப் போல் சுழலும் வட்ட வடிவு கொண்ட சக்கரத்தைக் கொண்டுள்ளாய். திருவேங்கடத்தலைவா. நீ உன் எச்சிலை உமிழும்போது அதனைத் தாங்குவதற்காக பொன்வட்டிலைப் பிடித்து நின்று என்றும் உன்னுடனே எல்லா இடத்திற்கும் செல்லும் பேறு பெறுவேன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

ஒண் பவள வேலை உலவு தன் பாற்கடலுள்*

கண் துயிலும் மாயோன்* கழலிணைகள் காண்பதற்கு*

பண் பகரும் வண்டினங்கள்* பண் பாடும் வேங்கடத்துச்*

செண்பகமாய் நிற்கும் திரு உடையேன் ஆவேனே 4

# பெருமாள் திருமொழி

அருமையான பவளங்களை அலைகள் கரையினில் தினமும் சேர்க்கும் குளிர்ந்த திருப்பாற்கடலில் அறிதுயில் புரியும் மாயவா உன் கழலிணைகள் காண்பதற்கு வழி தெரிந்துவிட்டது. பாடல்களைப் பாடியபடி வண்டுக் கூட்டங்கள் திரியும் திருவேங்கட மலையில் ஒரு செண்பக மரமாய் நிற்கும் பெரும்பேறு உடையேன் ஆவேனே. தினந்தோறும் உன் திருவடிகளுக்கு அர்ச்சனையாய் செண்பக மலர்கள் தந்து எப்போதும் உன் திருவடிகளில் நிலையாக இருப்பேனே.

# பெருமாள் திருமொழி

கம்ப மத யானைக்* கழுத்தகத்தின்மேல் இருந்து*

இன்பு அமரும் செல்வமும்* இவ் அரசும் யான் வேண்டேன்*

எம்பெருமான் ஈசன்* எழில் வேங்கட மலைமேல்*

தம்பகமாய் நிற்கும்* தவம் உடையேன் ஆவேனே 5

# பெருமாள் திருமொழி

செண்பக மரமாய் நிற்கும் பேறு பெரும் புண்ணியம் செய்தவர்க்கே கிட்டுமோ என்னவோ? அப்படியென்றால் திருவேங்கட மலை மேல் ஒரு முள்செடியாயாவது பிறக்கும் பேறு பெறுவேன். வலிமையும் அழகும் மிகுந்த பட்டத்து யானையின் கழுத்தின் மீதேறி இன்பத்தை நுகரும் செல்வத்தையும் அரசாட்சியையும் நான் வேண்டேன். எனக்கும் இந்த ஈரேழ் உலகங்களுக்கும் தலைவனான திருவேங்கட நாதனின் திருமலை மேல் ஒரு முள்செடியாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

மின் அனைய நுண்ணிடையார்* உருப்பசியும் மேனகையும்*

அன்னவர்தம் பாடலொடும்* ஆடல் அவை ஆதரியேன்

தென்ன என வண்டினங்கள்* பண் பாடும் வேங்கடத்துள்*

அன்னனைய பொற்குவடு ஆம்* அருந்தவத்தேன் ஆவேனே

6

# பெருமாள் திருமொழி

முள்செடியாய் நின்றால் எனக்கு மட்டுமே பயன். எம்பெருமானுக்கோ அடியவர்களுக்கோ எந்த பயனும் இல்லை. அதனால் திருவேங்கடமலையில் இருக்கும் பல சிகரங்களுக்குள் ஒரு சிகரமாக நான் நின்றால் இறைவன் இருக்கும் இடம் இது என்று அடியவர்களுக்கு உணர்த்தும் பேறு கிடைக்கும். (சிகரம் என்றால் மலைச் சிகரம் என்றும் கோபுரம் என்றும் பொருள் தரும்). மின்னலைப் போன்ற நுண்ணிய இடையினை உடைய ஊர்வசியும் மேனகையும் அவர்களைப் போன்றவர்களும் பாடியும் ஆடியும் மகிழ்விக்கும் இன்பங்களை நான் விரும்பேன். அவர்களின் பாடல் ஆடலைவிட இனிமையாக தேனினைப் போல் (தென்ன வென) வண்டுக் கூட்டங்கள் பண்களைப் பாடி ஆடும் திருவேங்கடத்துள் அழகு மிகுந்த பொற்சிகரமாக ஆகும் அரிய தவத்தை உடையவன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

வான் ஆளும் மா மதி போல்* வெண் குடைக்கீழ்* மன்னவர்தம்

கோன் ஆகி வீற்றிருந்து* கொண்டாடும் செல்வு அறியேன்*

தேன் ஆர் பூஞ்சோலைத்* திருவேங்கட மலைமேல்*

கானாறாய்ப் பாயும்* கருத்து உடையேன் ஆவேனே 7

# பெருமாள் திருமொழி

வானத்தில் இருக்கும் விண்மீன்களையெல்லாம் தன் ஒளியால் வென்று வானத்தை ஆளும் முழுமதியைப் போல் வெண்கொற்றக் குடையின் கீழ் அரசாளும் மன்னவர்களை எல்லாம் திறத்தால் வென்று அவர்கள் தலைவனாக வீற்றிருக்கும் பெருமையையும் நான் வேண்டேன். தேன் நிரம்பும் பூக்கள் உடைய சோலைகளைக் கொண்ட திருவேங்கட மலை மேல் ஒரு காட்டாறாய் பாயும் எண்ணத்தைக் கொண்டவன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

பிறை ஏறு சடையானும்* பிரமனும் இந்திரனும்*

முறையாய பெரு வேள்விக்* குறை முடிப்பான் மறை ஆனான்*

வெறியார் தண் சோலைத்* திருவேங்கட மலைமேல்*

நெறியாய்க் கிடக்கும்* நிலை உடையேன் ஆவேனே 8

# பெருமாள் திருமொழி

பிறையினை தன் சடையில் வைத்திருக்கும் சிவபெருமானும் பிரமனும் இந்திரனும் முறையுடன் உன்னை வேண்டிச் செய்யும் பெரும் வேள்விகளுக்கான பயன்களைத் தந்து அவர்களின் குறை தீர்ப்பாய். அவர்கள் முறை என்ன என்று அறியும் வகை சொல்லும் வேதங்களாய் நின்றாய். நறுமணம் கமழும் குளிர்ந்த சோலைகளைக் கொண்ட திருவேங்கட மலை மேல் அடியவர்கள் உன் திருக்கோயிலை அடையும் வழியாகக் கிடக்கும் நன்னிலை உடையவன் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

செடியாய வல்வினைகள் தீர்க்கும்* திருமாலே*

நெடியானே வேங்கடவா* நின் கோயிலின் வாசல்*

அடியாரும் வானவரும்* அரம்பையரும் கிடந்து இயங்கும்*

படியாய்க் கிடந்து* உன் பவளவாய் காண்பேனே 9

# பெருமாள் திருமொழி

உன் கோயிலுக்கு வரும் வழிகள் பல இருக்கலாம். அதனால் உன்னைக் காண வரும் அடியார்களில் சிலர் நான் வழியாய்க் கிடந்தாலும் என் மேல் வராமல் வேறு வழியாய் உன் கோயிலை அடையலாம். அவர்கள் எல்லோருடைய திருவடிகளும் என் மேல் பட வேண்டும் என்றால் உன் திருக்கோயிலின் படியாய் கிடக்கும் பேறு வேண்டும்.பற்பல பிறவிகளாய் செய்த ஒன்றுடன் ஒன்று பிணைந்த காட்டுச் செடிகளைப் போல் இருக்கும் என் வலிய வினைக்கூட்டங்களைத் தீர்க்கும் திருமகள் மணாளா. நான் என்றோ செய்த சிறிய நல்வினையை நினைவில் நெடுங்காலம் கொண்டு எனைக் காப்பவனே நெடியவனே. திருவேங்கடவா. உன் கோயிலின் வாசலில் அடியவர்களும் வானவர்களும் அரம்பையர்களும் வந்து உன்னைக் காணுமாறு ஒரு படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே.

# பெருமாள் திருமொழி

உம்பர் உலகு ஆண்டு* ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்*

அம்பொற் கலை அல்குல்* பெற்றாலும் ஆதரியேன்*

செம் பவள-வாயான்* திருவேங்கடம் என்னும்*

எம்பெருமான் பொன்மலைமேல்* ஏதேனும் ஆவேனே 10

# பெருமாள் திருமொழி

நான் ஏன் இப்படி இது ஆவேன்; அது ஆவேன் என்று உன்னை வேண்டிக் கொண்டிருக்கிறேன். அடியவனுக்கு அழகு தன் தலைவன் தன்னை எந்த நிலையில் வைத்தாலும் அதில் மகிழ்ந்திருந்து தலைவனுக்குத் தொண்டு செய்வதே. அதனால் நீ என்னை எந்த நிலையில் வைத்தாலும் அதற்கிணங்க ஏதேனும் ஒன்றாய் திருவேங்கட மலை மேல் நான் ஆவேன். தேவர்கள் உலகங்களை ஒரு குடை கீழ் ஆண்டு ஊர்வசியின் அழகிய பொன்னாடைகள் அணிந்த இடையிலிருந்து கிடைக்கும் இன்பத்தைப் பெற்றாலும் அதனை விரும்பேன். சிவந்த செம்மையான் திருப்பவள வாயானின் திருவேங்கடமென்னும் எம்பெருமானுடைய பொன் மலையில் அவன் திருவுள்ளப்படி ஏதேனும் ஆவேனே.

# பெருமாள் திருமொழி

மன்னிய தண் சாரல்* வட வேங்கடத்தான்தன்*

பொன் இயலும் சேவடிகள்* காண்பான் புரிந்து இறைஞ்சிக்*

கொல் நவிலும் கூர்வேற்* குலசேகரன் சொன்ன*

பன்னிய நூற் தமிழ்-வல்லார்* பாங்காய பத்தர்களே 11

# பெருமாள் திருமொழி

என்றென்றும் குளிர்ந்த சாரல் வீசும் வடவேங்கடத்தை உடைய எம்பெருமானின் பொன்னைப் போன்ற செவ்விய திருவடிகளைக் காண்பதற்கு இறைஞ்சி எல்லா எதிரிகளையும் வெல்லும் கூரிய வேலினைக் கைக் கொண்ட குலசேகரன் சொன்ன இந்தத் தமிழ்ப்பாடல்களை சொல்லி மனத்தில் வைத்தவர்கள் இறைவனுக்கு மிகவும் நெருக்கமான பக்தர்கள் ஆவார்கள்.

# பெரியாழ்வார்



பெரியாழ்வார் வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். திருவில்லிபுத்தூரில் ஆனிமாதம் சுவாதி நட்சத்திரத்தில் கருடன் அம்சமாக ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிறந்தவர். 'விஷ்ணு சித்தர்' என்பது இயற்பெயர். திருவில்லிபுத்தூரில் கோயில்கொண்டுள்ள வடபத்திரசாயி பெருமாளுக்கு அன்றலர்ந்த மலர்களைப் பறித்துப் பூமாலையாகச் சாற்றுவதைக் கைங்கர்யமாகக் கொண்டிருந்தார்.

# பெரியாழ்வார்



ஆழ்வார்களில் ஒரே பெண் ஆழ்வாரான ஆண்டாளின் வளர்ப்பு தந்தையானவர். ஆண்டாளைத் திருவரங்கம் உறையும் அரங்கனுக்கு மணம்முடித்துக் கொடுத்ததன் மூலம் அரங்கனுக்கே மாமனார் ஆனார். இறைவனுக்கே கண்ணேறு கழிக்க முயன்றதால் இவரை ஆழ்வார்களில் பெரியவர் எனும் பொருள்பட "பெரியாழ்வார்" என அரங்கன் அழைக்க, பின்னர் இதுவே இவர் பெயராகிப்போனது.

# பெரியாழ்வார்



இவரது பாடல்கள் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் முதலாயிரத்தில் 1 தொடக்கம் 12 வரை திருப்பல்லாண்டு (12 பாசுரங்கள்), 13 தொடக்கம் 473 வரை பெரியாழ்வார் திருமொழி (461 பாசுரங்கள்) ஆகிய இரு நூல்களில் அடங்கியுள்ளன. கண்ணனைப் பிள்ளையாகப் பாவித்து இவர் பாடிய பாடல்கள் பிற்காலத்தில் பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கியம் தோன்ற முன்னோடியாக அமைந்துள்ளன.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க்

கண்ணன் கேசவன்* நம்பி பிறந்தினில்*

எண்ணெய் சுண்ணம்* எதிரெதிர் தூவிடக்*

கண்ணன் முற்றம்* கலந்து அளறு ஆயிற்றே. 1

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

அழகு பொருந்திய மாடங்கள் நிறைந்த திருக்கோட்டியூரில் வாழும் கண்ணன் கேசவன் நம்பி திருவாய்ப்பாடியிலே நந்தகோபரின் இனிய இல்லத்திலே பிறந்தபோது, அவன் பிறந்த மகிழ்ச்சியைக் கொண்டாடும் முகத்தால் ஆயர்கள் ஒருவர் மீது பூசிய நறுமண எண்ணெயாலும் ஒருவர் மீது ஒருவர் தூவிய வண்ண வண்ணச் சுண்ணப் பொடிகளாலும் கண்ணனின் வீட்டுத் திருமுற்றம் எண்ணெயும் சுண்ணமும் கலந்து சேறானது.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

ஓடுவார் விழுவார்* உகந்து ஆலிப்பார்*

நாடுவார் நம்பிரான்* எங்குத்தான் என்பார்*

பாடுவார்களும்* பல்பறை கொட்ட நின்று*

ஆடுவார்களும்* ஆயிற்று ஆய்ப்பாடியே 2

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கோகுலத்திலுள்ளாரெல்லாரும் தங்கட்குத் தலைவரான நந்தகோபர்க்குப் பிள்ளை பிறந்ததாகக் கேள்விப்பட்டு அளவற்ற ஆநந்தமடைந்து தாம் செய்வது இன்னதென்று தெரியாமல், சிலர் ஓடினார்கள்; சிலர் சேற்றிலே வழுக்கி விழுந்தார்கள்; சிலர் உரக்க கோஷம் செய்தார்கள்; சிலர் 'நம் கண்மணி எங்கே?' என்று குழந்தையைத் தேடினார்கள்; சிலர் பாடினார்கள்; சிலர் பறையடிக்க சிலர் அதுக்குத் தகுதியாகக் கூத்தாடினார்கள்; ஆகவிப்படி பஞ்சலக்ஷம் குடியிலுள்ளாரெல்லாரும் சொல்ல முடியாத கோலாஹலமாயிருந்தார்கள். க்ருஷ்ணஜநநத்தால் திருவாப்பாடியில் விகாரமடையாதார் ஒருவருமில்லையென்பார் ஆய்ப்பாடியே ஓடுவாரும். . . . ஆடுவாருமாக ஆயிற்றென்றார். 'எங்குற்றான்' என்ற பாடமும் கொள்ளத்தக்கதே.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

பேணிச் சீர் உடைப்* பிள்ளை பிறந்தினில்*

காணத் தாம் புகுவார்* புக்குப் போதுவார்*

ஆண் ஒப்பார்* இவன் நேர் இல்லை காண்* திரு-

வோணத்தான்* உலகு ஆளும் என்பார்களே 3

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

எல்லா சீர்களையும் உடைய இந்த சிறு பிள்ளை கம்சனைப் போன்றவர்களிடம் இருந்து மறைந்து வளர்வதற்காக அந்தப் பெருமைகளை எல்லாம் பேணி/மறைத்து நந்தகோபர் இல்லத்தில் பிறந்தான். அப்போது அவனைக் காண்பதற்காக எல்லா ஆயர்களும் ஆய்ச்சியர்களும் திருமாளிகைக்குள் புகுவார்கள்களும் உள்ளே புகுந்து அவனைக் கண்டு வெளியே வருபவர்களுமாக இருக்கிறார்கள். புகுபவர்களும் புக்குப் போதுபவர்களும் ஒருவருக்கொருவர் கண்ணனின் பெருமைகளைப் பேசிக் கொள்கிறார்கள். 'இவனைப் போன்ற அழகுடைய ஆண்மகன் வேறு யாரும் இல்லை. இவன் திருவோணத்தானாகிய திருமாலால் அளக்கப்பட்ட மூவுலகங்களையும் ஆள்வான்' என்று சொல்கிறார்கள்.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

உறியை முற்றத்து* உருட்டி நின்று ஆடுவார்*

நறுநெய் பால் தயிர்* நன்றாகத் தூவுவார்*

செறி மென் கூந்தல்* அவிழத் திளைத்து* எங்கும்

அறிவு அழிந்தனர்* ஆய்ப்பாடி ஆயரே 4

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கண்ணன் பிறந்த ஸந்தோஷம் உள்ளடங்காமல், நெய்யும் பாலும் தயிருமிருக்கிற உறிகளை அறுத்துக் கொண்டுவந்து முற்றத்திலே உருட்டிவிட்டு ஆடினார்கள் சிலர்; நெய் பால் தயிர் முதலியவற்றை அபாரமாக தானஞ் செய்தார்கள் சிலர்; தலைமுடி அவிழ்ந்ததும் தெரியாமல் கூத்தாடினார்கள் சிலர் ஆகவிப்படி கோகுலத்து இடையர்கள் எல்லாரும் ஸந்தோஷப் பெருமையினால் இன்னதுதான் செய்வதென்று தெரியாமல் உன்மத்தரானார்கள். நன்றாகதூவுவார் என்றவிடத்து நன்று ஆக - (பிள்ளைக்கு) நன்மையுண்டாகும்படி என்று முரைக்கலாம்.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கொண்ட தாள் உறி* கோலக் கொடுமழுத்*

தண்டினர்* பறியோலைச் சயனத்தர்*

விண்ட முல்லை* அரும்பு அன்ன பல்லினர்*

அண்டர் மிண்டிப்* புகுந்து நெய்யாடினார் 5

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

இந்த இடையர்கள் தாங்கி வந்த உறிகள் அவர்கள் கால்களைத் தொடுமளவிற்கு இருக்கின்றன. அவர்களது ஆயுதங்களான அழகிய கூர்மையான மழுவையும் மாடு மேய்க்கும் கோல்களையும் ஏந்தி வந்திருக்கின்றனர். பனைமரத்திலிருந்து பறித்து எடுத்த ஓலையால் செய்த பாயை இரவில் படுக்கப் பயன்படுத்திவிட்டு அதனையும் எடுத்துக் கொண்டு வந்திருக்கின்றனர். பறித்தெடுத்த முல்லை அரும்பு போன்ற வெண்மையான பற்களைக் கொண்டிருக்கின்றனர். அப்படிப்பட்ட இடையர்கள் நெருக்கமாகக் கூடி கண்ணன் பிறந்த மகிழ்ச்சியைக் கொண்டாடும் முகமாக நெய்யால் ஆடினார்கள்.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கையும் காலும் நிமிர்த்துக்* கடார நீர்*

பைய ஆட்டிப்* பசுஞ் சிறு மஞ்சளால்*

ஐய நா வழித்தாளுக்கு* அங்காந்திட*

வையம் ஏழும் கண்டாள்* பிள்ளை வாயுளே 6

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கண்ணனாகிய குழந்தையின் கையையும் காலையும் நீட்டி நிமிர்த்து, பெரிய பானையிலே நறுமணப்பொருட்களுடன் காய்ச்சப்பட்ட வெந்நீரைக் கொண்டு மென்மையாக குழந்தையை நீராட்டி, மென்மையான சிறிய மஞ்சள் கிழங்காலே குழந்தையின் நாக்கை வழிக்கும் போது அப்போது அங்காந்த (திறந்த, ஆ காட்டிய) திருவாயின் உள்ளே வையம் ஏழும் கண்டாள் யசோதைப் பிராட்டியார். ஆகா. என்ன விந்தை!

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

வாயுள் வையகம் கண்ட* மடநல்லார்*

ஆயர் புத்திரன் அல்லன்* அருந்தெய்வம்*

பாய சீர் உடைப்* பண்பு உடைப் பாலகன்*

மாயன் என்று* மகிழ்ந்தனர் மாதரே 7

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கண்ணனாகிய குழந்தையின் கையையும் காலையும் நீட்டி நிமிர்த்து, பெரிய பானையிலே நறுமணப்பொருட்களுடன் காய்ச்சப்பட்ட வெந்நீரைக் கொண்டு மென்மையாக குழந்தையை நீராட்டி, மென்மையான சிறிய மஞ்சள் கிழங்காலே குழந்தையின் நாக்கை வழிக்கும் போது அப்போது அங்காந்த (திறந்த, ஆ காட்டிய) திருவாயின் உள்ளே வையம் ஏழும் கண்டாள் யசோதைப் பிராட்டியார். ஆகா. என்ன விந்தை!

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

பத்து நாளும் கடந்த* இரண்டாம் நாள்*

எத் திசையும்* சயமரம் கோடித்து*

மத்த மா மலை* தாங்கிய மைந்தனை*

உத்தானம் செய்து* உகந்தனர் ஆயரே 8

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கண்ணன் பிறந்து பன்னிரண்டாம் நாள் அந்தக் குழந்தைக்கு பெயர்சூட்டு விழா நடக்கிறது. அந்தத் திருவிழாவிற்காக எல்லா திசைகளிலும் கொடிகளும் தோரணங்களும் தாங்கிய வெற்றித் தூண்கள் நடப்பட்டிருக்கின்றன. அந்தத் திருவிழாவில் யானைகள் நிறைந்த கோவர்ந்தன மலையைத் தாங்கிய மைந்தனாம் கோபாலனை கைத்தலங்களில் வைத்துக்கொண்டு மகிழ்ந்தனர் ஆயர்கள்.

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்

எடுத்துக் கொள்ளில் மருங்கை யிறுத்திடும்

ஒடுக்கிப் புல்கில் உகரத்தே பாய்ந்திடும்

மிடுக்கி லாமையால் நான்மெலிந் தேன்நங்காய். ௯

# பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து

செந்நெலார் வயல்சூழ் திருக்கோட்டியூர்

மன்னு நாரணன் நம்பி பிறந்தமை

மின்னு நூல்விட்டுடச் சித்தன் விரித்த இப்

பன்னு பாடல் வல்லார்க்கு இல்லை பாவமே. 10

# தொண்டரடிப் பொடியாழ்வார்



தொண்டரடிப்பொடியாழ்வார் வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர் ஆவார்[1][2]. ஆழ்வார் வரிசைக் கிரமத்தில் பத்தாவதாக வரும் இவருக்கு 'விப்ர நாராயணர்' என்பது இயற்பெயர் ஆகும். திருவரங்கத்திலேயே வாழ்ந்திருந்து அத்தல இறைவனாகிய அரங்கநாதனுக்கு பாமாலை மற்றும் பூமாலை சாற்றும் சேவையைத் தன் வாழ்நாள் முழுதும் சிரமேற்கொண்டு செய்து வந்தார்.

# தொண்டரடிப் பொடியாழ்வார்



ஆழ்வார்களின் வசனங்கள் நாலாயிர திவ்ய பிரபந்தம் என்று போற்றப்படுகிறது. இந்தப் பிரபந்தம் ஓதப்படும் 108 வைணவ கோயில்கள் திவ்ய தேசம் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. அவரது படைப்புகளில் திருப்பள்ளி எழுச்சி பத்து வசனங்களைக் கொண்டதாகவும், திருமாலை நாற்பது வசனங்களைக் கொண்டதாகவும் உள்ளது. இவை இரண்டும் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் உள்ள 4000 சரணங்களில் கணக்கிடப்பட்டுள்ளன.

# தொண்டரடிப் பொடியாழ்வார்



தொண்டரடிப்பொடி மற்றும் பிற ஆழ்வார்களின் படைப்புகள் வைணவத்தின் தத்துவ மற்றும் இறையியல் கருத்துகளுக்குப் பங்களித்தன. மூன்று சைவ நாயன்மார்களுடன் சேர்ந்து, அவர்கள் தென்னிந்திய பிராந்தியத்தின் ஆளும் பல்லவ மன்னர்களைப் பாதித்தனர். இதன் விளைவாகத் தென்னிந்தியாவில் பௌத்தம் மற்றும் சமண மதத்தை வளரவிடாமல் தடுத்தனர் என்பது வரலாறாக உள்ளது. மேலும், இந்து மதத்தின் இரு பிரிவுகளான சைவம் மற்றும் வைணவம் தோன்றக் காரணமாக விளங்கினர்.

# தொண்டரடிப் பொடியாழ்வார்



தொண்டரடிப்பொடி ஆழ்வார் சோழ நாட்டில் திருமண்டங்குடி என்னும் ஊரில் பிரபவ வருடம், மார்கழி மாதம், கிருஷ்ண சதுர்த்தி, கேட்டை நட்சத்திரத்தில் செவ்வாய்கிழமை அன்று பிறந்தார். இவரின் தந்தை 'வேத விசாரதர்' "குடுமி சோழிய பிராமணர்" வகுப்பைச் சார்ந்தவர். மேலும் இப் பிரிவினர் கடவுள் விஷ்ணுவைப் புகழ்ந்து பாடுவதைத் தொழிலாக வைத்திருப்பதால் இவர்கள் "விப்ரா மக்கள்" என அழைக்கப்படுகிறார்கள். தொண்டரடிப்பொடி ஆழ்வார் பிறந்த 12-ஆவது நாளில் "விப்ர நாராயணர்" என்கிற பெயர் வைக்கப்பட்டது.

# தொண்டரடிப் பொடியாழ்வார்



சிறு வயதிலிருந்தே, ஸ்ரீ விஷ்ணுவை நோக்கிய பக்தி அவருக்குக் கற்பிக்கப்பட்டது. அவர் நன்கு ஆளுமையுடன் வளர்ந்தார். மேலும் அவர் வயது முதிர்ந்த நபர்களையும், அவருக்கு இளையவர்களையும் ஒரே மாதிரியாகக் கருதி அவர்களுக்குச் சரியான மரியாதை கொடுப்பவராக இருந்தார் என்று கூறப்படுகிறது.

# தொண்டரடிப் பொடியாழ்வார்



தான் எனும் ஆணவத்தைத் தவிர்க்கும் பொருட்டுத் தன்னைச் சிறுமைப்படுத்திக் கொள்வது ஞானிகளுக்கு இயற்கை. மேலும் பரமனுக்கு அடிமை என்பதினும் அவன் தன் உத்தம அடியார்க்கு அடிமை என்பதைப பெரிதாக எண்ணுவது வைணவ மரபு. அதனாலேயே அரங்கனுடைய தொண்டர்களின் அடியாகிய திருவடியின் தூசி எனும் பொருள்பட "தொண்டரடிப்பொடி" என்றும், அரங்கனின் பக்தியில் ஆழ்ந்துபோனவரை ஆழ்வார் என்று அழைப்பதற்கிணங்க தொண்டரடிப்பொடியாழ்வார் ஆனார்.

# தொண்டரடிப் பொடியாழ்வார்



திருமாலை அறியாதர் திருமாலையே அறியாதர்" எனும் வழக்கு இவரின் படைப்புகளுள் ஒன்றான திருமாலையின் உயர்வை செப்புகிறது. இதன் பொருள் யாதெனில் ஆழ்வார் இயற்றிய திருமாலை எனும் நூலை அறிந்திடாதவர் பரமனாகிய திருமாலையே அறிந்திடாதவர்கள் ஆவார் என்பதாம். அல்லது பரமனாகிய திருமாலை அறிய விரும்புவோர் ஆழ்வாரின் திருமாலை எனும் நூலை படித்தால் போதுமென்பதாம்.

# திருமாலை

காவலில் புலனை வைத்துக்* கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து,*

நாவலிட்டு உழி தருகின்றோம்* நமன் தமர் தலைகள் மீதே,*

மூவுலகு உண்டு உமிழ்ந்த* முதல்வ நின் நாமம் கற்ற,*

ஆவலிப் புடைமை கண்டாய்* அரங்கமா நகர் உளானே. 1

# திருமாலை

எல்லாவுலகங்களையும் (ப்ரளய காலத்திலே) திருவயிற்றிலே வைத்து (பிரளயம் நீங்கினபிறகு) அவற்றை வெளிப்படுத்திய ஜகத்காரணபூதனே அரங்கமாநகரளானே உனது திருநாமத்தைக் கற்றதனாலுண்டான செருக்கினாலே பஞ்சேந்திரியங்களையும் வெளியில் ஓடாதபடி அடைத்து பாபராசியை வெகுதூரம் உதறித்தள்ளி ஜயகோஷம் செய்து யமபடர்களின் தலைமேல் அடியிட்டுத் திரிகின்றோம்.

# திருமாலை

பச்சை மாமலைபோல் மேனி* பவளவாய் கமலச் செங்கண்*

அச்சுதா! அமரர் ஏறே!* ஆயர் தம் கொழுந்தே! என்னும்,*

இச்சுவை தவிர யான்போய்* இந்திர லோகம் ஆளும்,*

அச்சுவை பெறினும் வேண்டேன்* அரங்கமா நகர் உளானே! (2)

# திருமாலை

இப்படி திருநாமங் கற்ற ஆழ்வாரை நோக்கிப் பெரியபெருமாள் “ஆழ்வீர்! நம் பேர் சொன்னவர்களுக்கு நாம் கொடுப்பதொரு நாடு உண்டு; அதைத் தருகிறோம் கொள்ளும்.” என்ன; இவ்வுலகத்திலிருந்தபடியே திருநாமத்தைச் சொல்லி அதனால் பெறக்கூடிய இனிமைக்கு பரமபதத்திற் போய் அநுபவிக்கின்ற அந்த அனுபவித்தினால் தோன்றும் இனிமையும் ஈடாகாது; அது எனக்கு வேண்டா என்கிறார்.

# திருமாலை

வேத நூல் பிராயம் நூறு* மனிசர் தாம் புகுவ ரேலும்,*

பாதியும் உறங்கிப் போகும்* நின்றதில் பதினையாண்டு,*

பேதை பாலகனதாகும்* பிணி பசி மூப்புத் துன்பம், *

ஆதலால் பிறவி வேண்டேன் * அரங்கமா நகர் உளானே.* (3)

# திருமாலை

உலகத்தில் மானிடப்பிறவி யென்பது ஐந்மாந்தர ஸஹஸ்ரநற்றவங்களாலே பெறக்கூடியது; அதனை வருந்திப்பெற்றாலும், கர்ப்பத்திலேயும், பிறந்தவுடனும் நாலுநாள் கழித்தும் சில மாதங்கள் கழித்தும் சில வருடங்கள் கழித்தும் இறக்கக்கூடியவர்கள் பெரும்பான்மையரேயன்றி, வேதசாஸ்த்ரத்தில் "தாயுர்வை புரு"" (மனிதன் நூறு பிராயம் வாழ்பவன்) என்று கூறியுள்ளபடி தீர்க்காயுஸ்ஸாக வாழக்கூடியவர் மிகச் சிறுபான்மையரே; விதிவசத்தால் சிலர்நூறு பிராயம் புக்கு வாழப்பெற்றாலும் அவரது வாழ்நாள் கழியும் வகையை ஆராய்ந்தால் ஒரு நொடிப்பொழுதாவது நற்போதாகக் கழிய வழியில்லை. ஸூர்யன் அஸ்தமித்து மீண்டும் உதிக்குமளவும் உறங்குவது

# திருமாலை

ஒரு நியமமாக வந்துவிட்டபடியால் அஹோராத்ரமாகிய ஒரு திநத்துக்கு உள்ள அறுபது நாழிகையில் முப்பது நாழிகை உறக்கத்தில் கழிகிற கணக்கில் பாதி ஆயுஸ்ஸாகிய ஐம்பது வருஷம் உறக்கத்தால் கழிந்ததாகிறது; மற்ற பாதிவாழ்நாளில்-தன்னுடைய ஹிதாஹிதம் தாயின் அதீனமாயிருக்கும் சிசுத்வாவஸ்தையாய்ச் சிலகாலமும், எத்தனை தீம்புகள் செய்தாலும் சீறவொண்ணாதபடி செல்வப்பிள்ளை பருவமாய்ச் சிலகாலமும், பிறகு யௌவநம் வந்து புகுந்து விஷயாந்தரங்களிலே மண்டித்திரியும் பருவமாய்ச் சிலகாலமும், இங்ஙனே இந்திரியச் சிறையிலே அகப்பட்டுத் தடுமாறாநிற்க இடிவிழுந்தாற்போலே வந்து

# திருமாலை

புகுகிற கிழத்தனமாய்ச் சிலகாலமும் “அத்யுத்கடை; புண்யபாபைரிஹைவ பலமச்நுதே” (வரம்புகடந்த புண்யபாபங்களின் பலனை இப்பிறவியிலேயே அநுபவிக்கிறான்)என்றபடி - யௌவநத்திற் செய்த எல்லை கடந்த குறும்புகட்குப் பலனாக எய்தும் பிணிகளால் வருந்துவதாய்ச் சிலகாலமும், பசியினால் ஒன்றும் தோன்றாதபடி இடர்படுவதாய்ச் சிலகாலமும், ஒருபக்கத்தில் பிள்ளை செத்தான் என்று கேட்டு அழுவதும், மற்றொரு பக்கத்தில் மனைவி செத்தாள் என்று கேட்டு அழுவதுமாய் இப்படி ஸம்ஸாரத் துன்பங்களில் ஆழ்ந்து செல்லும் நாளாய்ச் சிலகாலமும் கழிவதால் இத்துன்பங்களை அநுபவிப்பதற்கு இன்னும் சிறிது ஆயுஸ் கடன் வாங்கிக் கொள்ளவேண்டியதாமேயன்றி உள்ள வாழ்நாளில் ஆத்மாவைப்பற்றிச் சிறிதாகிலுஞ்சிந்திக்கப் பொழுது கிடைப்பரிது; ஆதலால் இப்பிறவி எனக்கு வேண்டா என்கிறார்.

# திருமாலை

மொய்த்த வல்வினையுள் நின்று* மூன்று எழுத்துடைய பேரால்,*

கத்திர பந்தும் அன்றே* பராங்கதி கண்டு கொண்டான்,*

இத்தனை அடியரானார்க்கு* இரங்கும் நம் அரங்கனாய*

பித்தனைப் பெற்றும் அந்தோ!* பிறவியுள் பிணங்கு மாறே! (4)

# திருமாலை

இப்பாட்டு முதல், பதினான்காம் பாட்டளவும் பகவத் விஷயத்திலே தம்மைப்போல் ஆழங்காற்படாமல் உடலுக்கே கரைந்து நைந்து திரியும் ஸம்ஸாரிகளின் இழவைக்கண்டு பொறுக்கமாட்டாமல் தளர்ந்து ஒரு பக்கத்தில் ஆச்சர்யப்பட்டும், ஒரு பக்கத்தில் வருத்தப்பட்டும், மற்றொரு பக்கத்தில் வெறுப்புற்றும் இன்னொரு பக்கத்தில் நிந்தித்துக்கொண்டும் பேசுகிறார். பகவதநுபவத்திலே ஊன்றி உகப்பேயாய்ச் செல்லுமிவர் ஸம்ஸாரிப் பாவிகளைப்பற்றிக் கரைந்து வருந்துவானேன்?

# திருமாலை

இப்பாட்டு முதல், பதினான்காம் பாட்டளவும் பகவத் விஷயத்திலே தம்மைப்போல் ஆழங்காற்படாமல் உடலுக்கே கரைந்து நைந்து திரியும் ஸம்ஸாரிகளின் இழவைக்கண்டு பொறுக்கமாட்டாமல் தளர்ந்து ஒரு பக்கத்தில் ஆச்சர்யப்பட்டும், ஒரு பக்கத்தில் வருத்தப்பட்டும், மற்றொரு பக்கத்தில் வெறுப்புற்றும் இன்னொரு பக்கத்தில் நிந்தித்துக்கொண்டும் பேசுகிறார். பகவதநுபவத்திலே ஊன்றி உகப்பேயாய்ச் செல்லுமிவர் ஸம்ஸாரிப் பாவிகளைப்பற்றிக் கரைந்து வருந்துவானேன்?

# திருமாலை

பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான்* பெரியதோர் இடும்பை பூண்டு*

உண்டிராக் கிடக்கும் போது* உடலுக்கே கரைந்து நைந்து,*

தண்டுழாய் மாலை மார்பன்* தமர்களாய்ப் பாடி யாடி,*

தொண்டு பூண்டமுதம் உண்ணாத்* தொழும்பர் சோறு உகக்குமாறே! (5)

# திருமாலை

பெண்களோடு அணைந்து சுகத்தை அநுபவிக்க விரும்பதல் தீயோடு அணைந்து விடாய்தீர நினைப்பதையம், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கி சுகம் பெற நினைப்பதைய மொக்குமென்பார்- பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபண்டு என்கிறார். ஐயோ துக்கத்திற்கு ஸாதமானவற்றையே சுகத்திற்கு ஸாதனமாக நினைப்பதே இப்படியுமொரு மயக்கமுண்டோ பிழைக்கவேணுமென்று நினைப்பாரும் விஷத்தையுண்ப?

# திருமாலை

மறம்சுவர் மதிளெடுத்து* மறுமைக்கே வெறுமை பூண்டு,*

புறம்சுவர் ஓட்டை மாடம்* புரளும்போது அறிய மாட்டீர்,*

அறம் சுவராகி நின்ற* அரங்கனார்க்கு ஆட்செய்யாதே,*

புறம்சுவர் கோலம் செய்து* புள் கவ்வக் கிடக்கின்றீரே! (6)

# திருமாலை

விஷயங்கள் அற்பமென்றும் அஸ்திரமென்றும் கீழ்க்கூறிய ஆழ்வாரை நோக்கிச் சிலர் “விஷயங்களுக்கு அல்பாஸ்திரத்வம் முதலிய பலதோஷங்களுள்ளனவாயினும் அவற்றை நாங்கள் விடவேணுமென்ற நியதியில்லை; ஒரு விஷயத்தில் பூர்ணமான அனுபவத்தைப் பெறாதொழிவோமாயினும் விஷயங்கள் பல உளவாகையால் ஒன்றில் இல்லாத நன்மையை வேறொன்றிலே கூட்டிக்கொண்டு அனுபவிக்கிறோம் போம்” என்று சொல்ல, “அப்படியேயானாலும் அந்த விஷயங்களை அநுபவிக்ககக்கூடிய வஸ்து ஸ்திரமாயிருக்கவேணுமே அவ்விஷயங்களைப்போலவே போக்தாவும் அஸ்திரன்கிடீர்” என்கிறார் இப்பாட்டால்.

# திருமாலை

புலையறம் ஆகிநின்ற* புத்தொடு சமண மெல்லாம்,*

கலையறக் கற்ற மாந்தர்* காண்பரோ கேட்பரோதாம்,*

தலை அறுப்புண்டும் சாவேன்* சத்தியம் காண்மின் ஐயா,*

சிலையினால் இலங்கை செற்ற* தேவனே தேவன் ஆவான். (8)

# திருமாலை

‘தொண்டுபூண்டமுதமுண்ணாத்தொழும்பர்’ என்றும், “புள் கவ்வக்கிடக்கின்றீரே” என்றும் எங்களை இகழ்ந்துரைப்பதிற் பயனென்? ஸம்ஸாரத்தின் இயல்பு இப்படி யிராநின்றது; அன்றியும் “தொண்டுபூண்டு அமுதமுண்போமென்று பார்த்தாலும் எந்தத் தேவனை வணங்கி வழிபடுவதுதென்று தெரியவில்லை; நாங்கள் பரதேவதா நிச்சயம் பண்ண மாட்டாமையாலே ஸம்ஸாரத்திலே ஆழ்கிறோம்; எங்கள் மீது குற்றமென்?” என்று சில ஸம்ஸாரிகள் கூற, அவர்களைத் தெளிவிக்க விரும்பிய ஆழ்வார், தேவதா நிஷ்கர்ஷம் பண்ணித்தருகிறார். புத்தொடு - புத்தமென்ற வடசொல் புத்து எனத் திரிந்தது. சமணம் -க்ஷபணகருடைய மதம். கலையறக்கற்ற மாந்தராவார் -கூரத்தாழ்வான் போல்வார் . “ஸ்ருதிஸ்ம்ருதீதிஹாஸங்களில் நிலைநின்றவர்களாய் வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள்; அவர்களாகிறார்- கூரத்தாழ்வான் போல்வாரிறே”! என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

# திருமாலை

வெறுப்பொடு சமணர் முண்டர்* விதியில் சாக்கியர்கள்,* நின்பால்-

பொறுப்பரியனகள் பேசில்* போவதே நோயதாகி*

குறிப்பெனக் கடையும் ஆகில்* கூடுமேல் தலையை* ஆங்கே,-

அறுப்பதே கருமம் கண்டாய்* அரங்கமா நகருளானே! (9)

# திருமாலை

வெறுப்போடு-ஒரு காரணத்தை முன்னிட்டன்றியே நிஷ்காரணமாக எம்பெருமானுடைய பெருமை என்றால் சிவீலென்று திரஸ்கரிக்கையாகிற வெறுப்போடுகூடிய புறச்சமயிகள், ஸாத்விகர் காது கொடுத்துத் கேட்கப்பெறாத உன் விஷயமான தூஷணங்களைப் பேசும்போது அப்பேச்சுக்கள் ஒரு ஸாத்விகன் காதில் விழுந்தால், அவன்றான் மெய்யே ஸாத்விகனாகில் அந்த க்ஷணத்திலேயெ தன்னடையே உயிர் துறக்க வேணும் என்கிறார்-முன்னிரண்டடிகளால். உயிர்துறப்பதறகு நோய் முதலிய சில வியாஜங்கள் நேரவேண்டுமே என்று சிலர் நினைக்கக்கூடுமென்றெண்ணி “போவதே நோயதாகி” என்கிறார். பகவந்நிந்தையைக் கேட்பதற்கு மேற்பட்ட நோய்கூட உலகத்திலுண்டோ? என்பது கருத்து.

# திருமாலை

மற்றுமோர் தெய்வம் உண்டே* மதியிலா மானி டங்காள்,*

உற்றபோது அன்றி நீங்கள்* ஒருவன் என்று உணர மாட்டீர் ,

அற்றம்மேல் ஒன்று அறியீர் * அவனல்லால் தெய்வ மில்லை,*

கற்றினம் மேய்த்த எந்தை* கழலிணை பணிமின் நீரே. (10)

# திருமாலை

பல தேவரையும் பற்றிக் கூறுகிற வேதத்தின் உட்பொருளை நுட்பமாக ஆராய்ந்து அறியுந் திறமையில்லாமையால் நீங்கள் தேவதாந்தரங்களைப் பற்றுகின்றீர்கள்; ‘ஒரு குறையும் வாராமல் உன்னைப் பாதுகாக்கிறேன்’ என்று ப்ரதிஜ்ஞை பண்ணி பாணாஸுரனது வாசலிலே பரிவாரத்தோடு பாதுகாவாலாயிருந்த சிவன் அந்த வாணாசுரனை எதிர்த்துவந்த ஸ்ரீ கிருஷ்ணனோடு போர் செய்யமாட்டாமல் தோற்று ஓடினபோது அந்தச் சிவனுடைய வலியின்மையை அந்த வாணன் கண்டறிந்ததுபோல,

# திருமாலை

நீங்களும் ஸரணமாகப் பற்றியிருக்கிற தேவதாந்தரங்களுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால்தான் அத்தெய்வங்களின் பலஹீநத்வத்தைக் கண்டறிவீர்கள்; நீங்கள் இப்படி பரமாத்மாவைத் தவிர்த்து இதர தேவதைகளைப் பற்றுவதற்குக் காரணம் நுமக்குப் பகுத்தறிவு இல்லாமையே. உண்மையில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்வையே சரணமாகப் பற்றுங்களென்று உபதேசிக்கின்றனரென்க.

# திருமங்கையாழ்வார்



வைணவ நெறியைப் பின்பற்றிப் பக்தியில் சிறந்து விளங்கிய பன்னிரு ஆழ்வார்களுள் இளையவர் மற்றும் இறுதியானவர். சோழ நாட்டில் உள்ள திருவாலிதிருநகரி என்னும் ஊருக்கு அருகில் உள்ள திருக்குரையலூரில் கள்ளர் குடியில் பிறந்தார். இவரது இயற்பெயர் 'கலியன்' ஆகும். ஆதியில் இவர் சோழமன்னனுக்குப் படைத்தலைவனாக இருந்தார். ஒருமுறை போர்க்களத்தில் இவருடைய வீரத்தைக் கண்ட அரசன் இவரைச் சோழதேசத்தின் "திருமங்கை" நாட்டின் மன்னனாக்கினான். அன்று முதல் இவர் "திருமங்கை மன்னன்" என அழைக்கப்பட்டார்.

# திருமங்கையாழ்வார்



குமுதவல்லி எனும் மங்கை மீது கொண்ட காதலினால் வைணவம் அனுசரிக்க ஆரம்பித்தவர், அவளின் விருப்பத்தின்படி திருமால் அடியார்களுக்குத் தினமும் அன்னம் இடுவதையும், திருக்கோயில் கைங்கரியங்களில் ஈடுபடுவதையும் செய்துவரலானார். காலப்பொழுதில் தன்னை முழுமையாக இதில் ஈடுபடுத்திக் கொண்டு தன் செல்வங்களையும், அரசு செல்வங்களையும் முழுக்க இழந்தவரானார். கடமையை நிறைவேற்ற யாசகமும் கை கொடுக்காதப்படியால் களவாடியாவது அடியார்களுக்குத் தினமும் அன்னம் இடுவதையும், திருவரங்கத் திருக்கோயிலின் கைங்கரியங்களையும் செய்துவந்தார். இச்செயலை மெச்சி, இறைவனே இவர் களவாடும் பாதையில் வந்து, இவரை ஆட்கொண்டதோடு வேண்டிய செல்வங்களையும் கொடுத்தருளினார்.

# திருமங்கையாழ்வார்



இவர் 1137 பாடல்கள் பாடியுள்ளார். அவைகளாவன

திருவெழுக்கூற்றிருக்கை (ஒரு பாடல் - 47 அடிகள்)

சிறிய திருமடல் (ஒரு பாடல் - 155 அடிகள்)

பெரிய திருமடல் (ஒரு பாடல் - 297 அடிகள்)

திருநெடுந்தாண்டகம் (30 பாடல்கள்)

திருக்குறுந் தாண்டகம் (20 பாடல்கள்)

பெரிய திருமொழி (1084 பாடல்கள்)

# பெரிய திருமொழி

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்* பெருந் துயர் இடும்பையில் பிறந்து*

கூடினேன் கூடி இளையவர்தம்மோடு* அவர் தரும் கலவியே கருதி

ஓடினேன் ஓடி உய்வது ஓர் பொருளால்* உணர்வு எனும் பெரும் பதம் திரிந்து

நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்* நாராயணா என்னும் நாமம். (1)

# பெரிய திருமொழி

கீழ்க்கழிந்த காலமெல்லாம் வாடிக்கிடந்தேன் , மனவருத்தமடைந்தேன் அளவற்ற துக்கங்களுக்கு இருப்பிடமான இல்லரத்திலே பிறந்து பொருந்தப்பெற்றேன்; அப்படி கிடந்ததனால் இளமை தங்கிய பெண்கள் தரக்கூடிய சிற்றின்பத்தை ஆசைப்பட்டு அந்தப்பெண்கள் போன வழியையே பற்றி ஓடினேன்; இப்படி ஓடித்திரியுமிடத்து; எம்பெருமான் திருவருளாலே ஞானமென்கிற ஒரு சிறந்த நிலையில் அடிவைத்து நன்மை தீமைகளை ஆராயப் புகுந்தேன் அப்படி ஆராயுமளவில் நாராயணா மஹா மந்த்ரத்தை நான் கண்டுகொண்டேன்.

# பெரிய திருமொழி

ஆவியே! அமுதே! என நினைந்து உருகி* அவர் அவர் பணை முலை துணையாப்*

பாவியேன் உணராது எத்தனை பகலும்* பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்*

தூவி சேர் அன்னம் துணையொடு புணரும்* சூழ் புனல் குடந்தையே தொழுது*

என் நாவினால் உய்ய நான் கண்டுகொண்டேன்* நாராயணா என்னும் நாமம். (2)

# பெரிய திருமொழி

நினைந்து உருகி - சிற்றின்பங்களை நினைத்து நினைத்து மனமுருகி

அவர் அவர் - பலபல பெண்டுகளுடைய

பணைமுலை - பருத்த முலைகளையே

துணை ஆ - ரக்ஷகமாகக்கொண்டு

பாவியேன் - பாபியான நான்

# பெரிய திருமொழி

சேமமே வேண்டி தீவினை பெருக்கி* தெரிவைமார் உருவமே மருவி*

ஊமனார் கண்ட கனவிலும் பழுது ஆய்* ஒழிந்தன கழிந்த அந் நாள்கள்*

காமனார் தாதை நம்முடை அடிகள்* தம் அடைந்தார் மனத்து இருப்பார்*

நாமம் நான் உய்ய நான் கண்டுகொண்டேன்* நாராயணா என்னும் நாமம். (3)

# பெரிய திருமொழி

தீ வினை பெருக்கி - துஷ்கருமங்களை அதிகமாகச் செய்து

தெரிவைமார் உருவமே மருவி - ஸ்திரீகளுடைய வடிவழகையே பேணி

கழிந்த அந்நாள்கள் - கீழே கழிந்த நாள்களானவை

ஊமனார் கண்ட கனவிலும் பழுது ஆய் ஒழிந்தன - ஊமை கண்ட கனவிலுங் காட்டில் வீணாகக் கழிந்து போயின;

காமனார் தாதை - மன்மதனுக்குப் பிதாவும்

# பெரிய திருமொழி

வென்றியே வேண்டி வீழ் பொருட்கு இரங்கி* வேல்கணார் கலவியே கருதி*

நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்* என் செய்கேன்? நெடு விசும்பு அணவும்*

பன்றி ஆய் அன்று பாரகம் கீண்ட* பாழியான் ஆழியான் அருளே*

நன்று நான் உய்ய நான் கண்டுகொண்டேன்* நாராயணா என்னும் நாமம். (4)

# பெரிய திருமொழி

பாரகம் கீண்ட - பூ மண்டலத்தை உத்தரித்த

பாழியான் - மிடுக்கையு டையனாய்

ஆழியான் - ஸ்ரீ ஸுதர்சந பாணியான ஸர்வேச்வரனுடைய

அருளே - க்ருபையினாலே

நான் நன்று உய்ய - நான் செவ்வையாக உஜ்ஜீவிக்கும்படி

# பெரிய திருமொழி

கள்வனேன் ஆனேன் படிறு செய்து இருப்பேன்* கண்டவா திரிதந்தேனேலும்*

தெள்ளியேன் ஆனேன் செல் கதிக்கு அமைந்தேன்* சிக்கெனத் திருவருள் பெற்றேன்*

உள் எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்* உடம்பு எலாம் கண்ண நீர் சோர*

நள் இருள் அளவும் பகலும் நான் அழைப்பன்* நாராயணா என்னும் நாமம். (5)

# பெரிய திருமொழி

நின்ற ஆ நில்லா நெஞ்சினை உடையேன் - நின்றபடி நில்லாத [சஞ்சலமான] நெஞ்சை யுடையேனான நான்

என் செய்கேன் - என்ன பண்ணுவேன்?

அன்று - முன்னொரு காலத்து

நெடு விசும்புஅணவும் பன்றி ஆய் - நெடிய ஆகாசத்தை அளாவி வளர்ந்த மஹா வராஹஸ்வரூபியாய்

பாரகம் கீண்ட - பூ மண்டலத்தை உத்தரித்த

# பெரிய திருமொழி

எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்* எனக்கு அரசு என்னுடை வாழ்நாள்*

அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி* அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்*

வம்பு உலாம் சோலை மா மதிள்* தஞ்சை மா மணிக் கோயிலே வணங்கி*

நம்பிகாள்! உய்ய நான் கண்டுகொண்டேன்* நாராயணா என்னும் நாமம். (6)

# பெரிய திருமொழி

நம்பிகாள் - பகவத் குணாநுபவத்தால் நிறைந்திருக்கின்ற பாகவதர்களே!,

எம்பிரான் - எமக்கு உபகாரகனும்

எந்தை - எமக்குத் தந்தையும்

என்னுடைய சுற்றம் - எனக்கு ஸகலவித பந்துவும்

எனக்கு அரசு - என்னை ஆண்டவனும்

# பெரிய திருமொழி

இல் பிறப்பு அறியீர் இவர் அவர் என்னீர்* இன்னது ஓர் தன்மை என்று உணரீர்*

கற்பகம் புலவர் களைகண் என்று உலகில்* கண்டவா தொண்டரைப் பாடும்*

சொல் பொருள் ஆளீர் சொல்லுகேன் வம்மின்* சூழ் புனல் குடந்தையே தொழுமின்*

நல் பொருள் காண்மின் பாடி நீர் உய்மின்* நாராயணா என்னும் நாமம். (7)

# பெரிய திருமொழி

கற்பகம் என்று - கல்பவ்ருக்ஷம்போல் ஸர்வஸ்வதானம் செய்பவரென்றும்

புலவர் என்று - ஸர்வஜ்ஞரென்றும்

களைகண் என்று - ரக்ஷகர் என்றும் (ஆகவிப்படி)

கண்ட ஆ பாடும் - மனம் போனபடி (சிறப்பித்துக்கூறிக்)கவிபாடுகின்ற

சொல்பொருள் ஆனீர் - சொல்லும் பொருளும் நன்கறிந்த மஹாகவிகளே!

# பெரிய திருமொழி

கற்றிலேன் கலைகள் ஐம்புலன் கருதும்* கருத்துளே திருத்தினேன் மனத்தை*

பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை* பெரு நிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம்*

செற்றமே வேண்டித் திரிதர்வேன் தவிர்ந்தேன்* செல் கதிக்கு உய்யும் ஆறு எண்ணி*

நல் துணை ஆகப் பற்றினேன் அடியேன்* நாராயணா என்னும் நாமம். (8)

# பெரிய திருமொழி

கலைகள் - சாஸ்த்ரங்களை

கற்றிலேன் - கற்றறிந்தவனல்லேன்;

ஐம்புலன் கருதும் கருத்துள் - பஞ்சேந்திரியங்கள் விரும்புகின்ற விஷயங்களிலே

மனதைத் திருத்தினேன் - நெஞ்சைச் செலுத்திக் கிடந்தேன்;

அதனால் - இப்படியிருந்ததனாலே

# பெரிய திருமொழி

குலம் தரும் செல்வம் தந்திடும்* அடியார் படு துயர் ஆயின எல்லாம்*

நிலம் தரம் செய்யும் நீள் விசும்பு அருளும்* அருளொடு பெரு நிலம் அளிக்கும்*

வலம் தரும் மற்றும் தந்திடும்* பெற்ற தாயினும் ஆயின செய்யும்*

நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்* நாராயணா என்னும் நாமம். (9)

# பெரிய திருமொழி

நாராயணா என்னும் நாமம் - நாராயண நாமமானது (தன்னை அநுஸந்திக்கு மவர்கட்கு)

குலம் தரும் - உயர்ந்த குலத்தைக் கொடுக்கும்;

செல்வம் தந்திடும் - ஐச்வரியத்தை அளிக்கும்;

அடியார் படு துயர்ஆயினஎல்லாம் - அடியவர்கள் அனுபவிக்கிறதுக்கமென்று பேர்பெற்றவையெல்லாவற்றையும்

நிலம் தரம் செய்யும் - தரை மட்டமாக்கிவிடும்

# பெரிய திருமொழி

மஞ்சு உலாம் சோலை வண்டு அறை மா நீர்* மங்கையார் வாள் கலிகன்றி*

செஞ்சொலால் எடுத்த தெய்வ நல் மாலை* இவை கொண்டு சிக்கென தொண்டீர்!*

துஞ்சும்போது அழைமின் துயர் வரில் நினைமின்* துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம்*

நஞ்சு தான் கண்டீர் நம்முடை வினைக்கு* நாராயணா என்னும் நாமம் (10)

# பெரிய திருமொழி

மங்கையார் - திருமங்கையென்னும் நாட்டிலே உள்ளவர்கட்குத் தலைவரும்

வாள் - வாளை உடையவருமான

கலிகன்றி - திருமங்கையாழ்வார்

செம் சொலால் எடுத்த - செவ்விய சொற்களைக்கொண்டு அருளிச்செய்த

தெய்வம் - திவ்யமான

# பெரிய திருமொழி

காரைக்கால் அம்மையார் மூன்று பெண் நாயன்மார்களில் ஒருவரும், மூத்தவருமாவார். கயிலை மலையின் மீது கைகளால் நடந்து சென்றவரை, சிவபெருமான் அம்மையே என்று அழைத்ததாலும், காரைக்கால் மாநகரில் பிறந்தவர் என்பதாலும் காரைக்கால் அம்மையார் என்று வழங்கப்பெறுகிறார்.[3] பரமதத்தன் என்பவரை மணந்து இல்லற வாழ்வில் ஈடுபட்டிருந்தவர், ஒரு நாள் கணவன் கொடுத்தனுப்பிய இரு மாம்பழங்களில் ஒன்றினைச் சிவனடியாருக்குப் படைத்துவிட்டு, அந்த மாம்பழத்தினைக் கணவன் கேட்க, இறைவனிடம் வேண்டி மாம்பழத்தினைப் பெற்ற நிகழ்விலிருந்து இறைவனைச் சரணடைந்தார்



# பெரிய திருமொழி

இவர் இசைத்தமிழால் இறைவனைப் பற்றி முதன்முதலாகப் பாடியவராகவும், தமிழுக்கு அந்தாதி எனும் இலக்கண முறையை அறிமுகம் செய்தவராகவும் அறியப்பெறுகிறார். அற்புதத் திருவந்தாதி, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், திரு இரட்டை மணிமாலை போன்ற நூல்களைத் தந்து சைவத்தமிழுக்குப் பெரும் தொண்டாற்றியுள்ளார். இவருடைய பதிக முறைகளைப் பின்பற்றியே பிற்காலத்தில் தேவாரப் பதிகங்கள் இயற்றப்பட்டன. இவருக்கெனக் காரைக்கால் சிவன் கோவிலில் தனி சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது. அக்கோவில் காரைக்கால் அம்மையார் கோவில் என்று மக்களால் அழைக்கப் பெறுகிறது.



# திருவிரட்டை மணிமாலை

திருவிரட்டைமணிமாலை என்பது காரைக்கால் அம்மையாரால் பாடப்பெற்ற நூலாகும். இந்நூல் சைவ சமய பதினோராம் திருமுறையைச் சேர்ந்தது. இந்நூல் தமிழ் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றான இரட்டைமணிமாலையைச் சேர்ந்ததாகும். காரைக்கால் அம்மையார் சிவபெருமானின் சிறப்புகளைப் புகழ்ந்து இந்நூலில் எழுதியுள்ளார். காரைக்கால் அம்மையார் பேயுருவம் பெற்றதும் அற்புதத் திருவந்தாதி எனும் நூலைப் படைத்தார். அதில் பேயுருவம் பெற்றதைப் பற்றி பாடியுள்ளார். அடுத்ததாக இறைவனின் புகழைத் திருவிரட்டை மணிமாலையில் குறிப்பிடுகிறார்

# திருவிரட்டை மணிமாலை

கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சமென்பாய்த்

தளர்ந்திங் கிருத்தல் தவிர்திகண் டாய்தள ராதுவந்தி

வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டுவெள்ளை

இளந்திங் களும்எருக் கும்இருக் குஞ்சென்னி ஈசனுக்கே.

# திருவிரட்டை மணிமாலை

நெஞ்சமே ஈசனுக்கே வந்தி; வெந்துயர் வந்து அடும்போது அஞ்சி, என்பாய் இங்குத் தளர்ந்திருத்தலைத் தவிர்தி` என இயைத்துக் கொள்க. வெந்துயர் கிளர்ந்து, வந்து அடும் போது - கொடிய துன்பம் மிகுந்து வந்து வருத்தும்போது, என்பாய்த் தளர்ந்திருத்தல் - உடம்பு எலும்பாய் இளைத்துப் போகும்படி மெலிந்திருத்தல். வளர்ந்து உந்து கங்கை - பெருகி மோதுகின்ற கங்கை. கோட்டுத் திங்கள் - வளைவையுடைய சந்திரன். `ஈசனுக்கு` என்பதை, `ஈசனை` எனத் திரிக்க. தளராது வந்தி - மனம் சலியாது வணங்கு. `சிவனை மனம் சலியாது வணங்குவாரைத் துயர்வந்து அணுகாது` என்றதாம்.

# திருவிரட்டை மணிமாலை

ஈசன் அவனல்லாது இல்லை எனநினைந்து

கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து - பேசி

மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்

பிறவாமைக் காக்கும் பிரான்.

# திருவிரட்டை மணிமாலை

ஈசன் - ஐசுவரியம் உயைவன்; அஃதாவது, உயிர்களாகிய அறிவுடைப் பொருள்களை அடிமைகளாகவும், ஏனை அறிவிலாப் பொருள்களை உடைமைகளாகவும் உடையவன். எனவே, `முழுமுதல் தலைவன்` என்பதாயிற்று `அவன்` என்பது, முன்னைப் பாட்டிற் போந்த அந்த ஈசனைச் சுட்டிற்று. நினைதல். இங்குத் துணிதலைக் குறித்தது. கூசுதல் - தம்மையும் ஏனையோரையும் தலைவர்களாக எண்ண நாணுதல். `அவனையே மனத்தகத்துக் கொண்டிருந்து` என்க. `கொண்டிருந்தும், பேசியும்` என எண்ணும்மை விரிக்க. `பிரான்` என்றது, `அவன்` என்னும் சுட்டளவாய் நின்றது. பிறவாமை, எதிர்மறை வினையெச்சம்.

`சிவனைப் பொது நீக்கியுணர்ந்து, மறவாது நினைவாரை அவன் பிறவாமற் காப்பான்` என்றவாறு.

# திருவிரட்டை மணிமாலை

பிரானென்று தன்னைப்பன் னாள்பர வித்தொழு வார்இடர்கண்

டிரான்என நிற்கின்ற ஈசன்கண் டீர்இன வண்டுகிண்டிப்

பொராநின்ற கொன்றைப் பொதும்பர்க் கிடந்துபொம் மென்துறைவாய்

அராநின் றிரைக்குஞ் சடைச்செம்பொன் நீள்முடி அந்தணனே.

# திருவிரட்டை மணிமாலை

அந்தணன், தன்னைப் பன்னாள் பரவித் தொழுவாரது இடரைக் கண்டு (வாளா) இரான் என நிற்கின்ற ஈசன்` என இயைக்க. `பிரான்` என்றது சொல்லுவாரது குறிப்பால், `முழுமுதல் தலைவன்` என்னும் பொருட்டாய் நின்றது. `தன்னையே பிரான் என்று` எனப் பிரிநிலை ஏகாரம் விரித்து, முன்னே கூட்டுக. பரவுதல் - துதித்தல். `ஈசன்` என்பது இங்கு, `இறைவன்` என முன்னர்ப் பொதுமையில் நின்று, பின்னர் `இரான் என நிற்கின்ற` என்னும் அடைபெற்று, சிவனது சிறப்புணர்த்தி நின்றது. `தொழுவாரவர் துயராயின தீர்த்தல் உன தொழிலே` (தி.7 ப.1 பா.9) என நம்பியாரூரரும் அருளிச் செய்தார். கிண்டுதல் - கிளறுதல். பொருதல் - போர் செய்தல். பொதும்பர் - சோலை. பூக்களால் நிரம்பியிருத்தல் பற்றித் திரு முடியை, `சோலை` என்றார். பொம் மெனல், ஒலிக் குறிப்பு. `துறை` எனவே, `கங்கை` என்பது தானே பெறப்பட்டது. `சடையாகிய செம் பொன் முடி` என்க. `சடை, நிறத்தால் பொன்போல்கின்றது` என்பதாம். `பிற முடிதனை விரும்பாதவன்` என்பது குறிப்பு. அந்தணன் - அழகிய தட்பத்தினை (கருணையை) உடையவன்; காரணப் பெயர். கண்டீர், முன்னிலையசை. `தன்னைப் பொது நீக்கி நினைந்து, பன்னாள் பரவித் தொழுவாரது இடரை நீக்குபவன் சிவன்` என்பதாம்.

# திருவிரட்டை மணிமாலை

அந்தணனைத் தஞ்சம்என் றாட்பட்டார் ஆழாமே

வந்தணைந்து காத்தளிக்கும் வல்லாளன் - கொந்தணைந்த

பொன்கண்டால் பூணாதே கோள்அரவம் பூண்டானே

என்கண்டாய் நெஞ்சே இனி.

# திருவிரட்டை மணிமாலை

முன்னைப் பாடலிற் கூறிய அவ்வந்தணன் அத்தன்மையன் ஆதலின், நெஞ்சே, இனியேனும் அவனது பெருமையைச் சொல்லி அவனைப் புகழ்` என்பது இப்பாட்டின் திரண்ட பொருள். இதன் முதல் இரண்டடிகள் முன்னைப் பாட்டிற் கூறியவற்றை மீட்டும் அநுவதித்துக் கூறியன. `துயரில் ஆழாமே` எனச் சொல்லெச்சம் வருவித்துரைக்க. கொந்து - கொத்து; என்றது தீக் கொழுந்தை. `இணர் எரி` * என்றல் வழக்கு. `கொந்தில் அணைந்த பொன்` என்க. நெருப்பில் காய்ச்சி ஓட விட்ட பொன், மாசு நீங்கி ஒளி மிக்கதாகும். பொன் ஆகுபெயராய், அதனால் ஆகிய அணி கலங்களைக் குறித்தது. கோள்- கொடுமை. `இனி` என்பதன் பின், `ஆயினும்` என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. `அந்தணன்` என்றது, `அவ்வந்தணன்` என்னும் பொருட்டாகலின் முதற்கண், `அந்தணன்` என்றே வைத்து, பின், `அவனை என்` எனக் கூட்டி முடிக்க. கண்டாய், முன்னிலையசை. `கோள் அரவம் பூண்டமையே அவன் `தஞ்சம்` என்று அடைந்தாரை ஆழாமாற் காத்தலைத் தெரிவிக்கும்` என்பது குறிப்பு. `அறியாது` கழிந்த நாள்கள் போக, அறிந்த பின்னராயினும் தாழாது சிவனைத் துதித்தல் வேண்டும்` என்பதாம்.

# திருவிரட்டை மணிமாலை

இனிவார் சடையினில் கங்கையென் பாளைஅங் கத்திருந்த

கனிவாய் மலைமங்கை காணில்என் செய்திகையிற் சிலையால்

முனிவார் திரிபுரம் மூன்றும்வெந் தன்றுசெந் தீயின்மூழ்கத்

தனிவார் கணையொன்றி னால்மிகக் கோத்தளம் சங்கரனே.

# திருவிரட்டை மணிமாலை

முனிவார் - கோபிப்பவர்; திரிபுரம், (வானத்தில்) திரிந்தபுரம். என வினைத்தொகை. பகைவர், `வெந்து மூழ்க` என்பதனை, `மூழ்கி வேவ` என மாற்றிவைத் துரைக்க. சிலை - வில். `சிலையால்` என்றது, `விற் போரினால்` என்றபடி. வார்கணை- நீண்ட அம்பு. `கணை ஒன்றினால்` என்பதை, `கணை ஒன்றினை` எனத் திரித்துக் கொள்க. அங்கம் - உடம்பு. `காணின் என் செய்தி` என்றது, `நாணித் தலை குனிவை போலும்` என்றபடி. எனினும், `உயிர்களின் நன்மைக்காகவன்றிப் பிறிதொன்றையும் செய்யாதவன்நீ` என்பதை அவன் அறிவான் ஆகலின், `இதுவும் ஒரு நன்மைக்கே` என்பது உணர்ந்து அவனும் முனியப் போவதில்லை; நீயும் நாணுதற்குக் காரணம் இல்லை` என்பது இப்பாட்டின் உள்ளுறைச் சிறப்பு இதனை வட நூலார் `நிந்தாத் துதி` என்றும், அதனைத் தமிழில் பெயர்த்துக் கூறுவார், `பழிப்பது போலப் புகழ்தல்`* என்றும் கூறுவர். பின்னும் இவ்வாறு வருவனவற்றை உணர்ந்து கொள்க.

# திருவிரட்டை மணிமாலை

சங்கரனைத் தாழ்ந்த சடையானை அச்சடைமேற்

பொங்கரவம் வைத்துகந்த புண்ணியனை - அங்கொருநாள்

ஆவாளன்று ஆழாமைக் காப்பானை எப்பொழுதும்

ஓவாது நெஞ்சே உரை.

# திருவிரட்டை மணிமாலை

சங்கரன் - இன்பத்தைச் செய்பவன். தாழ்ந்த சடை - நீண்டு தொங்குகின்ற சடை. பொங்கு - சினம் மிகுகின்ற. `அங்கொருநாள்` என்றது, கூற்றுவன் வரும் நாளினை. ஆ! ஆ!, இரக்கக் குறிப்பு இடைச்சொல். என்று - என்று இரங்கி. `ஆழாமைக் காப்பான்` என்பது மேலேயும் வந்தது.* ஓவாது - ஒழியாமல். உரை - சொல்லு; துதி. எப்பொழுதும் ஓவாது துதித்தால்தான் காப்பான்` என்பது குறிப்பு. `அன்று துதித்தல் இயலாது` என்பதாம், `சாங்காலம் சங்கரா! சங்கரா என வருமோ` என்பது பழமொழி.

# திருவிரட்டை மணிமாலை

உரைக்கப் படுவதும் ஒன்றுண்டு கேட்கின்செவ் வான்தொடைமேல்

இரைக்கின்ற பாம்பினை என்றுந் தொடேல்இழிந் தோட்டந்தெங்கும்

திரைக்கின்ற கங்கையுந் தேன்நின்ற கொன்றையுஞ் செஞ்சடைமேல்

விரைக்கின்ற வன்னியுஞ் சென்னித் தலைவைத்த வேதியனே.

# திருவிரட்டை மணிமாலை

உம்மை, சிறப்பு. செவ்வான் தொடை - செவ்விய உயர்ந்த மலர்மாலை; கொன்றை மாலை. இரைக்கின்ற - சீறிக்கொண்டிருக்கின்ற. தொடேல் - தொடாதே. என்றது, அது, `பிறைச் சந்திரன் வளரும்` என்று பசியோடு காத்திருக்கின்றது; அதனால் சினம் மிகுந்து கடித்துவிடலாம் - என்றபடி. இதனால், `தம்முட் பகையுடையவனவாகிய பாம்பையும், மதியையும் ஓரிடத்தில் சேர்த்து வைத்திருக்கின்றா யல்லையோ` எனக் குறிப்பாற் புகழ்ந்தவாறு. இழிந்து ஓட்டத்து - கீழே வீழ்ந்து ஓடும்பொழுது. திரைக்கின்ற - அலை வீசுகின்ற. விரைக்கின்ற - `வாசனை வீசுகின்ற கொன்றை` என இயைக்க. வன்னி - வன்னியிலை. தலை, ஏழாம் வேற்றுமையுருபு. வேதியன் - வேதம் ஓதுபவன். `சிவன் சாம வேதத்தை ஓதுபவன்` என்பர். ஓதுதல் பிறர் அறியவாம்.

# திருவிரட்டை மணிமாலை

வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்

காதியனை ஆதிரைநன் னாளானைச் - சோதிப்பான்

வல்லேன மாய்ப்புக்கு மாலவனும் மாட்டாது

கில்லேன மாஎன்றான் கீழ்.

# திருவிரட்டை மணிமாலை

`வேதத்தை ஓதுபவனும், வேதத்திற்குப் பொருளாய் உள்ளவனும், வேதத்தைச் செய்தவனும் ஆகிய ஆதிரை நன்னாளானை` என்க. `சோதித்தற்கு மாலவனும் வல் ஏனமாய்க் கீழ்ப் புக்கு, மாட்டா- கில்லேன் அமா - என்றான்` என வினை முடிக்க. சோதித்தல்- அளந்தறிதல். ஏனம் - பன்றி. கில்லேன் - மாட்டேன். `அம்மா` என்னும் வியப்பிடைச்சொல் இடைக்குறைந்து நின்றது. `மாலவனும்- கில்லேன் - என்றான்` என்றதனால், `ஏனையோர் மாட்டாமை சொல்ல வேண்டுவதோ` என்பது கருத்து.

# திருவிரட்டை மணிமாலை

கீழா யினதுன்ப வெள்ளக் கடல்தள்ளி உள்ளுறப்போய்

வீழா திருந்தின்பம் வேண்டுமென் பீர் விர வார்புரங்கள்

பாழா யிடக்கண்ட கண்டன் எண் தோளன்பைம் பொற்கழலே

தாழா திறைஞ்சிப் பணிந்துபன் னாளுந் தலைநின்மினே.

# திருவிரட்டை மணிமாலை

இழிந்த துன்பமாகிய பெரிய கடலிலே தள்ளப்பட்டு, அதன் உள்ளே அழுந்தாமல் வேறிருந்து நுகர்கின்ற இன்பம் வேண்டும்` என்று விரும்புகின்றவர்களே - என்று எடுத்து, `தலைநின்மின்` என முடிக்க. நின்றால், `அத்தகைய இன்பம் கிடைக்கும்` என்பது குறிப்பெச்சம். தள்ளுதலுக்கு `வினையால்` என்னும் வினைமுதல் வருவிக்க. `இருந்து நுகர்கின்ற` என ஒரு சொல் வருவிக்க. `துன்பக் கலப்பு இல்லாத இன்பம்` என்றபடி. அது வீட்டின்பமேயாம். விரவார் - கலவாதவர்; பகைவர். `கண்ட` என்றது `செய்த` என்றபடி. கண்டன் - வன்கண்மையுடையவன். `வன்கண்மை குற்றத்தின் மேலது` என்பது கருத்து.

தாழாது - தாமதியாமல். இறைஞ்சுதல் - தலை வணங்குதல். பணிதல் - அடியில் வீழ்தல். தலை, இடைச் சொல்லாதலின், `தலைநின் மின்` என்றது ஒருசொல் நீர்மைத்து. `அச்செயலிலே நின்மின்` என்றதாம்.

# திருவிரட்டை மணிமாலை

தலையாய ஐந்தினையுஞ் சாதித்துத் தாழ்ந்து

தலையா யினவுணர்ந்தோர் காண்பர் - தலையாய

அண்டத்தான் ஆதிரையான் ஆலாலம் உண்டிருண்ட

கண்டத்தான் செம்பொற் கழல்.

# திருவிரட்டை மணிமாலை

தலையாய ஐந்து - மந்திரங்களுள் தலையாய ஐந்தெழுத்து, சாதித்தல் - கடை போகப் பற்றி முயலுதல். அஃது இங்குக் கணித்தலைக் குறித்தது. தாழ்தல் - வணங்குதல். தலையாயின - மேலான நூல்கள் `அருள் நூலும், ஆரணமும், அல்லாதும், அஞ்சின்-பொருள் நூல்களே` * ஆதலின் அவற்றை உணர்ந்தோர் திருவைந் தெழுத்தையே பற்றிச் சாதிப்பர் - என்றபடி. தலையாய அண்டம் - சிவலோகம். `தலையாயின உணர்ந்தோர் சாதித்துத் தாழ்ந்து கழல் காண்பர்` என வினை முடிக்க, இதனுள் சொற்பொருள் பின்வரு நிலையணி வந்தது.

# திருவிரட்டை மணிமாலை

கழற்கொண்ட சேவடி காணலுற் றார்தம்மைப் பேணலுற்றார்

நிழற்கண்ட போழ்தத்தும் நில்லா வினைநிகர் ஏதுமின்றித்

தழற்கொண்ட சோதிச்செம் மேனியெம் மானைக்கைம் மாமலர்தூய்த்

தொழக்கண்டு நிற்கிற்கு மோதுன்னி நம்அடுந் தொல்வினையே.

# திருவிரட்டை மணிமாலை

தொல்லை வினைவந்து சூழாமுன் தாழாமே

ஒல்லை வணங்கி உமையென்னும் - மெல்லியலோர்

கூற்றானைக் கூற்றுருவங்காய்ந்தானை வாய்ந்திலங்கு

நீற்றானை நெஞ்சே நினை.

# திருவிரட்டை மணிமாலை

தொல்லை - பழமை. தாழாமே - தாமதி யாமலே. ஒல்லை - விரைவாக. கூற்று - யமன். காய்தல். உதைத்த லாகிய தன் காரியம் தோற்றிநின்றது. வாய்ந்து - (திருமேனியில்) பொருந்தி. `வணங்கி நினை` என்பதை `நினைந்து வணங்கு` என முன் பின்னாக நிறுத்தி, விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க.

# திருவிரட்டை மணிமாலை

நினையா தொழிதிகண் டாய்நெஞ்ச மேஇங்கொர் தஞ்சமென்று

மனையா ளையும்மக்கள் தம்மையுந் தேறிஓர் ஆறுபுக்கு

நனையாச் சடைமுடி நம்பன் நந் தாதைநொந் தாதசெந்தீ

அனையான் அமரர் பிரான்அண்ட வாணன் அடித்தலமே.

# திருவிரட்டை மணிமாலை

நெஞ்சமே, மனையாளையும் மக்கள் தம்மை யும், `இங்கு ஒர் தஞ்சம்` என்று தேறி, அண்ட வாணன் அடித்தலம் நினையாது ஒழிதியோ` என இயைத்துக்கொள்க. மனையாளும், மக்களும் அம்மையார்க்கு இல்லையாதலின், `அவர்களைத் தேறி` என்றது, `அவர்களைத் தேறும் பிறரது மனங்களைப்போலவே நீயும் ஆகி` என்றது என்க. `சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போல நீ வெள்கினாயே... நெஞ்சமே`1 என அருளிச்செய்தார் ஞான சம்பந்தரும். `ஒழிதியோ` என்பதில் வினாப் பொருட்டாய ஓகாரம் தொகுத்தலாயிற்று, `கடையவ னேனைக் கருணையினாற்கலந் தாண்டு கொண்ட - விடையவனே விட்டிடுதி கண்டாய்` 2 என்பதிற்போல. அவ்வோகாரத்தால், `அங்ஙனம் செய்தியாயின் கெடுவை` என்னும் குறிப்புப் போந்தது. கண்டாய், முன்னிலையசை. இங்கு - இவ்வுலகில். தஞ்சம் - புகலிடம். தேறுதல் - தெளிதல். ஓர் ஆறு, கங்கை. கங்கை யாறு புக்கது; ஆயினும் சடை நனைய வில்லை` என்றது சடைக்கு அதுபோதவில்லை என்றபடி. நொந்தாத- மிகுக்க வேண்டாத. `மிக எரிகின்ற` என்றபடி. அனையான் - போன்றவன். அண்டவாணன் - சிவலோகத்தில் வாழ்பவன். அடித்தலம் - திருவடியாகிய புகலிடம், `புகலிடம் ஆகாததை, ஆகும் என்று மயங்கிப் புகலிடம் ஆவதை விட்டொழியாதே` என அறிவுறுத்தவாறு

# திருவிரட்டை மணிமாலை

அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்

முடித்தலமும் நீமுரித்த வாறென் - முடித்தலத்தின்

ஆறாடி ஆறாஅனலாடி அவ்வனலின்

நீறாடி நெய்யாடி நீ.

# திருவிரட்டை மணிமாலை

`அடித்தலத்தின் நெரித்தவாறு` என இயையும். இன், ஐந்தாம் உருபு. அரக்கன், இராவணன். `முரித்தவாறு என்` - என்றது, `பிழை நோக்கி ஒறுத்தல் வேண்டியோ` என்றபடி. ஒறுத்தபின் இசைபாடித் துதிக்க அருள்செய்தமையும் கேட்கப்படுவதால், `பிழை செய்தவரும் அஃது உணர்ந்து பணிந்தால், பிழையை நோக்காது அருள் செய்பவன் நீ` என்பதும் குறிக்கப்பட்டதாம். `ஆடி` நான்கும் பெயர்கள். அவற்றுள் முதற்கண் உள்ளதில் இகர விகுதி செயப்படு பொருட்டாயும் ஏனையவற்றில் அது வினைமுதற் பொருட்டாயும் நின்றது. ஆறு - கங்கை. `அனலோ` என்றாயினும். `அனலின்கண்` என்றாயினும் ஏற்கும் உருபு விரித்துக்கொள்க. `நீற்றின் கண்` என ஏழாவது விரிக்க. `நீ ஆடுபவன்; நீ அரக்கனது தோளையும் முடியையும் முரிக்கக் காரணம் என்ன? என வினை முடிக்க. `தலம்` மூன்றும், `இடம்` என்னும் பொருளன. `அடிகளாகிய தலம், முடியாகிய தலம்` என்க.

# திருவிரட்டை மணிமாலை

நீநின்று தானவர் மாமதில் மூன்றும் நிரந்துடனே

தீநின்று வேவச் சிலைதொட்ட வாறென் திரங்குவல்வாய்ப்

பேய்நின்று பாடப் பெருங்கா டரங்காப் பெயர்ந்துநட்டம்

போய்நின்று பூதந் தொழச்செய்யும் மொய்கழற் புண்ணியனே.

# திருவிரட்டை மணிமாலை

தானவர் - அசுரர். நிரந்து - ஒருங்கே. உடனே- விரைவில். `தீயின்கண் நின்று` என உருபுவிரிக்க. சிலை - வில். தொடுதல் - வளைத்தல். இது, அம்பெய்தலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. திரங்கு - தசை மெலிந்து தொங்கிய. வல் வாய் - பிணத்தைத் தின்னும் வாய். பெயர்ந்து - புடை பெயர்ந்து. `நட்டம் செய்யும்` என இயைக்க. `பூதம் போய் நின்று தொழ` என மாறிக் கூட்டுக. `வந்து` என்பதனை, `போய்` என்றது இடவழுவமைதி. எனவே, `நின்பால் வந்து தொழ` என்றவாறாம். மொய் கழல் - பாதத்தைச் சூழ்ந்த கழல். புண்ணியன் - அற வடிவினன். `மதில் மூன்றும் வேவச் சிலைதொட்ட வாறு என்` என்றதற்கு முன்பாட்டில் `நீ முரித்தவாறு என்` என்றதற்கு உரைத்தவாறே உரைக்க. பின்னிரண்டடிகள் ஆசெதுகை பெற்றன.

# திருவிரட்டை மணிமாலை

புண்ணியங்கள் செய்தனவும் பொய்ந்நெறிக்கட் சாராமே

எண்ணியோ ரைந்தும் இசைந்தனவால் - திண்ணிய

கைம்மாவின் ஈருரிவை மூவுருவும் போர்த்துகந்த

அம்மானுக் காட்பட்ட அன்பு.

# திருவிரட்டை மணிமாலை

`(யாம்) பொய்ந்நெறிகளில் சேராமல் விலகிய துடன், செய்த செயல்களும் புண்ணியங்களே. அஃது (எவ்வாற்றால் எனின்) எண்ணப்பட்ட ஐம்பொறிகளும் அம்மானுக்கு ஆட்பட்ட அன்பிற்கு இசைந்தவாயின` என இயைத்துப் பொருள் கொள்க. உம்மை, இறந்தது தழுவிய எச்சம். எண்ணிய - `ஐந்து` என்று எண்ணப் பட்ட. ஈற்று அகரம் தொகுத்தல். ஆல், அசை. கைம்மா - யானை. `ஈர் உரிவை`, வினைத் தொகை `உரித்த தோல்` என்பது பொருள். மூவுருவம் - மும்மூர்த்தி உருவம். `அன்பிற்கு` என நான்காம் உருபு விரித்து, `அன்பு செய்தற்கு` என உரைக்க. `ஐம்பொறிகள் அன்பு செய்தற்கு இசைந்தன` என்றமையால், `இசையாது மாறிச் செல்லுதலே அவற்றின் இயல்பு` என்பதும், `அவற்றை அவ்வாறு இசையச் செய்தல் வேண்டும்` என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. `ஈருரிவை, மூவுருவம்` என்பது எண்ணலங்காரநயம் தோற்றி நின்றது.

# திருவிரட்டை மணிமாலை

அன்பால் அடைவதெவ் வாறுகொல் மேலதோ ராடரவம்

தன்பால் ஒருவரைச் சாரவொட் டா ததுவேயுமன்றி

முன்பா யினதலை யோடுகள் கோத்தவை ஆர்த்துவெள்ளை

என்பா யினவும் அணிந்தங்கோர் ஏறுகந் தேறுவதே.

# திருவிரட்டை மணிமாலை

`கொல், ஐய இடைச்சொல். அதனால், அடையு மாற்றை நீரே அருளுதல் வேண்டும்` என்பது குறிப்பெச்சமாயிற்று. `ஐயரே, நும் மேலது` என முன்னிலையை வருவித்து, `நும்மைப் பிறர் அன்பால் அடைவது எவ்வாறு கொல்` என முடிக்க. ஓர் அரவு, முடி மேல் உள்ளது. ஆடு அரவு - படமெடுத்து ஆடுகின்ற பாம்பு. `ஆகவே அது சீறுகின்றது` என்றதாம். `முன்பு ஆயின` எனப் பிரித்து, `தலை ஓடுகள்` என முடித்து, `அவை கோத்து` என வேறெடுத்துக் கொண்டு உரைக்க. `கோத்து ஆர்த்து, அணிந்து, உகந்து ஏறுவது ஏர் ஏறு` என்க. ஏறு - இடப. `அது பாய்வதால் அச்சம் உண்டாதலுடன், யானை மீதும், குதிரை மீதும் ஏறாமல், இடபத்தின்மேல் ஏறுவதால், நன்கு மதிக்கவும் இயலவில்லை` என்பதாம்.

`கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேறாதே

இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ`1

என்றது காண்க. உகத்தல் - விரும்புதல். `பாம்பும், இடபமும் பகையா யினாரைச் சீறுதலும், பாய்தலும் செய்யுமேயல்லது, அன்பரை ஒன்றும் செய்யா` என்பதும், `யானை குதிரைகளின் மேல் ஏறியும், மணி மாலைகளை அணிந்து யாம் பெருமை பெற வேண்டுவதில்லை` என்பதும், `எவ்வாறு கொல்` என்னும் ஐயத்தை நீக்கும் விடைகள் என்பது கருத்து. `பூணாணாவதோர் அரவங்கண் டஞ்சேன்` 2 என்று அருளிச் செய்தமை காண்க.

# திருவிரட்டை மணிமாலை

ஏறலால் ஏறமற் றில்லையே எம்பெருமான்

ஆறெலாம் பாயும் அவிர்சடையார் - வேறோர்

படங்குலவு நாகமுமிழ் பண்டமரர்ச் சூழ்ந்த

தடங்கடல்நஞ் சுண்டார் தமக்கு.

# திருவிரட்டை மணிமாலை

எம்பெருமானும், அவிர் சடையாரும் ஆகிய நஞ்சுண்டார் தமக்கு ஏற, ஏறலால் மற்று இல்லையே` என முடிக்க. `பெருமான்` என்பது ஒருமையாயினும் உயர்த்துக் கூறும் சொல்லாதலின் பன்மையோடு மயங்கிற்று. `இல்லையே` என்னும் ஏகாரம் வினாப் பொருட்டாய், `உறவாகவும் விரும்பிலர்` என்னும் குறிப்பினதாய் நின்றது. `ஆறு` என்றது ஆகுபெயராய் அதன் நீரைக் குறித்தது. வேறோர் நாகம், உயர்ந்த பாம்பு, அது `வாசுகி` என்பது. `உமிழ்ந்த நஞ்சு, சூழ்ந்த நஞ்சு` எனத் தனித்தனி இயைக்க. `அமரரை` என்னும் இரண்டாம் உருபு தொகுத்தலாயிற்று. `அமரர் சூழ்ந்த` என்பது பாடம் அன்று, முன்னைப் பாட்டில் கூறியவாறு, `ஏற்றையே உகந்து ஏறுவது இல்லாமையாலன்று; விரும்பாமையால்` என்பது இங்குக் கங்கையைத் தாங்கி மண்ணுலகினரைக்காத்தமை, நஞ்சை உண்டு விண்ணோரைக் காத்தமை இவற்றைக் குறித்த குறிப்பால் உணர்த்தப்பட்டது.

# திருவிரட்டை மணிமாலை

தமக்கென்றும் இன்பணி செய்திருப்

பேமுக்குத் தாமொருநாள்

எமக்கென்று சொன்னால் அருளுங்கொ

லாமிணை யாதுமின்றிச்

சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறொப்ப

தொன்றுதொண் டைக்கனிவாய்

உமைக்கென்று தேடிப் பொறாதுட

னேகொண்ட உத்தமரே.

# திருவிரட்டை மணிமாலை

இணை யாதும் இன்றி` என்றது, `காளைகளைப் பயன்படுத்துகின்றவர்கள் இரண்டை இணைத்தே பயன்படுத்துவர் ஆகலின் அவ்வாறு இணைத்தற்கு ஒன்று கிடையாமையால் ஒரு காளையையே உடையவராய் இருக்கின்றார்` என்றபடி.

`இனி ஒற்றைக் காளையையே பயன்படுத்துவதாயினும் உமாதேவி ஊர்வதற்கு மற்றொரு காளை இன்றியமையாது வேண்டும்; அஃது இல்லாமையால், அவளையும் தமது ஒரு காளையின்மேலே உடன் ஏற்றிக் கொண்டு வருகின்றார்` என மேலும் குறிகூறியபடி. `இத்தகைய இலம்பாடு (வறுமை) உடையவர், அவருக்கென்றே நாம் என்றும் பணிசெய்திருப்பினும், `எமக்கு என்று என்று ஒன்று இரந்தால், அதனை ஈய வல்லவராவரோ` - என ஐயுறுகின்றோம்` என்பது இப்பாட்டிற் கூறப்பட்ட பொருள். இதவும் நிந்தாத் துதி. `ஒருநாள் அருளுங்கொல்` என்றமையால், `எந்நாளும் அருள மாட்டாது வாளாதே இருப்பரோ` என்பதும் போந்தது. ஆம், அசை. `எமக்கு என்று` என்பதன் பின், `ஒன்று` என்பது வருவிக்க. `சொன்னால்`` என்றது, `வேண்டினால்` என்றபடி. `பிள்ளை` என்றது, இளமையைக் குறித்தது. `இணை யாதும் இன்றி` என்பது, `தனியே சுமக்கின்றது` என்பதைக் குறித்தற்கும் `வேறு ஒப்பதுஒன்று பெறாது` என்பது இணைத்தற்கு இல்லை? என்பதைக் குறித்தற்கும் கூறியன ஆகலின், கூறியது கூறல் ஆகாமை யறிக. தொண்டைக் கனி - கொவ்வைக் கனி. உத்தமர் - எல்லாரினும் மேலானவர். என்றது, `மற்றொரு காளையை இவர் கொள்ளாமைக்குக் காரணம் வறுமையன்று; உமையாளையும் ஒரு காளைமேல் உடன் கொண்டு செல்ல விரும்புதலேயாம்` என்பதை உணர்த்தி, `ஆகவே, `இவர் எம்மைத் தம் அடிமையென்று கருதியிரங்கி, வேண்டியவற்றை ஈபவரே எனவும் குறித்தவாறு. நம்பியாரூரரும் இவ்வாறே, முன்னர், `ஊர்வது ஒன்று (ஏ) உடையான்`* எனக் கூறிப் பின்னர், `உம்பர் கோன்` என அவனது பெருமையுணர்த்தியவாறு அறிக.

# திருவிரட்டை மணிமாலை

உத்தமராய் வாழ்வார் உலந்தக்கால் உற்றார்கள்

செத்த மரமடுக்கித் தீயாமுன் - உத்தமனாய்

நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்திறமே

கேளாழி நெஞ்சே கிளர்ந்து.

# திருவிரட்டை மணிமாலை

உத்தமராய் - கல்வி, செல்வம், அதிகாரம், முதலியவற்றில் ஒன்றாலேனும், பலவற்றாலேனும் உயர்ந்தவர்களாய். `வாழ்வாரும்` என்னும் உயர்வு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. உலந்தக்கால் - இறந்துவிட்டால். `உயர்ந்தவர்களாய் வாழ்ந்தவர் களாயிற்றே` என்று எண்ணுதல் இன்றி, எல்லாரோடும் ஒப்பச் செத்த மரத்தையே (காய்ந்த விறகையே) அடுக்கி, அவற்றோடு ஒன்றாகச் சேர்த்து! உறவினர்கள் தீத்து (எரித்து) விடுவார்கள் `இவ்வளவே இவ்வுலக வாழ்வு` என்றபடி. `ஆகையால் இந்த வாழ்விலே ஆழ்தலை யுடைய நெஞ்சே, உன்னையும் அவ்வாறு செய்தற்கு முன், சிவனது புகழை அறிந்தோர் சொல்லக் கேள்` என்க. `கேட்டால், `நிலையான வாழ்வைப் பெறுவாய்` என்பது குறிப்பெச்சம். `உத்தமன்` என்பதற்கு, முன்னைப்பாட்டில் `உத்தமர்` என்றதற்கு உரைத்தவாறே உரைக்க. `ஆழி` இரண்டில் முன்னது, `கடல்` என்னும் பொருட்டாயும், பின்னது `ஆழ்தல் உடையது` என்னும் பொருட்டாயும் நின்றன. `கிளர்ந்து கேள்` என முன்னே கூட்டி, `ஊக்கம் கொண்டு கேள்` என உரைக்க. இங்ஙனம் உரைக்கவே, `ஊக்கம் இன்றிக் கேட்டல் பயனுடைத்தாகாது` என்பது பெறப்பட்டது.

`இரட்டை மணி மாலை இருபது பாட்டுக்களால் அமைதல் வேண்டும்` என்பதனால் திருக்கடைக் காப்புக் கூறிற்றிலர். இப்பிரபந்தம் முழுவதும் அந்தாதியாய் வந்து மண்டலித்தவாறு காண்க.

# ஆண்டாள்



ஆண்டாள் தமிழகத்தில் 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வைணவ ஆழ்வார்களுள் ஒருவர்[1][2]. வைணவம் போற்றும் 12 ஆழ்வார்களில் இவர் ஒருவரே பெண்ணாவார். ஆண்டாள், திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்னும் இரண்டு பாடற் தொகுதிகளை இயற்றியுள்ளார். வைணவ சமய நூல்கள் கூறும் இவரது வரலாறு இறைவன் மீது இவர் கொண்டிருந்த காதலை நமக்கு எடுத்துரைக்கிறது. மேலும், ஆண்டாள் பூமிப் பிராட்டியின் அவதாரமாகக் கருதப்படுகிறார்.

# ஆண்டாள்



மதுரைக்கு அண்மையிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் ஊரில் வசித்துவந்த விஷ்ணுசித்தர் (பெரியாழ்வார்) என்னும் அந்தணர் ஒருவரால் ஒரு குழந்தையாகத் துளசிச் செடியின் கீழ் கிடந்தபோது, ஆண்டாள் கண்டெடுக்கப்பட்டாள். இவ் அந்தணர் திருவில்லிபுத்தூர் ஆண்டாள் சமேத அரங்கநாதர் கோவிலுக்கு மலர்கள் கொய்து கொடுப்பதைத் தமது கடமையாகக் கொண்டவர். தனக்கெனக் குடும்பம் எதுவும் இல்லாதிருந்த நிலையிலும், கண்டெடுத்த குழந்தையைத் தனக்கு இறைவனால் வழங்கப்பட்ட கொடை எனக் கருதி வளர்த்து வரலானார். ஆயர் குல பெருமை அறிந்த பெரியாழ்வார் அக்குழந்தைக்கு இட்ட பெயர் கோதை என்பதாகும்.

# ஆண்டாள்



இளம் வயதிலேயே, தனக்குத் தெரிந்த சமயம் சார்ந்த கருத்துகள் மற்றும் தமிழ்மொழி போன்ற அனைத்தையுமே விஷ்ணுசித்தர் கோதைக்குச் சொல்லிக் கொடுத்தார். இதனால் கோதை இளம் வயதிலேயே கண்ணன் மீது மிகுந்த பக்தியுணர்வு கொண்டவராயும் தமிழில் நல்ல திறமை கொண்டவராகவும் இருந்தார். சிறு வயதிலேயே கண்ணன் மீதிருந்த அளவற்ற அன்பு காரணமாக அவனையே மணம் செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்தையும் வளர்த்துக்கொண்டார். தன்னைக் கண்ணனின் மணப்பெண்ணாக நினைத்துப் பாவனை செய்துவந்தார். கோயிலில் இறைவனுக்கு அணிவிப்பதற்காக விஷ்ணுசித்தர் தொடுத்து வைத்திருக்கும் மாலைகளை ஒவ்வொரு நாளும் அவருக்குத் தெரியாமல் தான் அணிந்து கண்ணனுக்கு ஏற்றவளாகத் தானிருக்கிறோமா என்று கண்ணாடியில் பார்த்து மகிழ்ந்து பின்னர்த் திரும்பவும் கொண்டுபோய் வைத்துவந்தார். இதனால் கோதை சூடிய மாலைகளே இறைவனுக்கும் சூடப்பட்டன. ஒருநாள் இதனை அறிந்து கொண்ட விஷ்ணுசித்தர் கோதையைக் கடிந்துகொண்டார்.

# ஆண்டாள்



அவள் சூடிய மாலையை ஒதுக்கிவிட்டுப் புதிய மாலை தொடுத்து இறைவனுக்கு அணிவித்தார். அன்றிரவு இறைவன் அவரது கனவில் தோன்றிக் கோதை அணிந்த மாலைகளே தனக்குப் உகப்பானவை எனவும் அவற்றையே தனக்குச் சூடவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். இதனாலேயே "சூடிக்கொடுத்த சுடர்க்கொடி" என்றும் "இறைவனையே ஆண்டவள்" என்ற பொருளில் ஆண்டாள் என்றும் போற்றப்படுகிறார்.

கோதை மண வயதடைந்த பின்னர் அவளுக்காக ஒழுங்கு செய்யப்பட்ட திருமண ஏற்பாடுகளை மறுத்து, திருவரங்கம் (ஶ்ரீரங்கம்) கோயிலில் உறையும் இறைவனையே மணப்பதென்று பிடிவாதமாக இருந்தார். என்ன செய்வதென்று அறியாது கவலையுடனிருந்த விஷ்ணுசித்தருடைய கனவில் தோன்றிய இறைவன், கோதையை மணப்பெண்ணாக அலங்கரித்து திருவரங்கம் கோயிலுக்கு அழைத்துவருமாறு பணித்தார். குறித்த நாளன்று கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்ட கோதை, கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுடன் கலந்துவிட்டாள் என்பது ஆண்டாள் வரலாறு

# ஆண்டாள்



ஆண்டாள் தனது 15ஆம் வயதில் இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கு முன் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்னும் இரண்டு நூல்களை இயற்றியுள்ளார். இவ்விரு நூல்களும் அதன் இலக்கிய செழுமை, தத்துவம், பக்தி ஆகியவற்றிக்காக அனைவராலும் போற்றப்படுகின்றது. இவரது முதல் படைப்பான திருப்பாவை 30 பாடல்களைக் கொண்டுள்ளது. இத் திருப்பாவை ஆண்டாள் தன்னை ஆயர்பாடியில் வாழும் கோபிகையாக நினைத்துக் கொண்டு பாடப்பெற்ற பாட்டுகளின் தொகுப்பாகும்.

# ஆண்டாள்



இவரது இரண்டாவது படைப்பான நாச்சியார் திருமொழி 143 பாடல்களைக் கொண்டுள்ளது. இறைவனை நினைத்துருகிப்பாடும் காதல்ரசம் மிகு பாடல்களின் தொகுப்பாகக் காணப்படுகின்றது. இது வடமொழியில் எழுதப்பட்ட ஜெயதேவரின் கீத கோவிந்தம் எனும் நூலினை ஒத்ததன்மை உடையதாகக் காணப்படுகின்றது. கண்ணனை மணமுடிப்பதாக ஆண்டாள் பாடியுள்ள நாச்சியார் திருமொழியில் உள்ள 'வாரணமாயிரம்' பாடல் தொகுப்பு புகழ் பெற்றது. இது சில தமிழ் திரைப்படங்களில் பாடல் காட்சியாக எடுத்தாளப்பட்டுள்ளது. ஆண்டாளின் இவ்விரு படைப்புகளும் குறிப்பாகத் திருப்பாவை நாட்டின் (தென்கலை மற்றும் வடகலை பின்பற்றும்) அனைத்து வைணவதலங்களிலும் வைணவர்களின் இல்லங்களிலும் தினந்தோறும் ஓதப்பட்டு வருகின்றது. மேலும் வைணவதலங்களில் நடைபெறும் முக்கிய விழாக்களிலும் வைணவர்களின் இல்லவிழாவிலும் வடமொழி மறைகளுக்கு நிகராகத் தவறாமல் ஓதப்படுகின்றது.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

வாரணம் ஆயிரம் சூழ வலஞ்செய்து

நாரணன் நம்பி நடக்கின்றான் என்று எதிர்

பூரண பொற்குடம் வைத்துப் புறம் எங்கும்

தோரணம் நாட்டக் கனாக் கண்டேன் தோழீ நான் (1)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

ஆயிரம் யானைகள் சூழ்ந்து வர என் தலைவன் நாராயணன் வருகின்றான் என்ற செய்தியைக் கேட்டதும், அவனை எதிர்கொண்டழைக்க ஊரார் எல்லாம் பொன்னால் செய்து புனித நீர் நிறைத்தக் குடங்களை எல்லாத் திசைகளிலும் வைத்து வீதி வாசல் எங்கும் தோரணம் நாட்டினார்கள். அதனை என் கனவில் நான் கண்டேனடி தோழீ.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

நாளை வதுவை* மணமென்று நாளிட்டு*

பாளை கமுகு* பரிசுடைப் பந்தற்கீழ்*

கோளரி மாதவன்* கோவிந்தனென்பான் ஓர்*

காளை புகுத* கனாக்கண்டேன் தோழீ! நான்*

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

நாளை திருமண நாள் என்று குறித்து, பாளையும் கமுகும் நிறைந்திருக்கும் பந்தல் கீழ், சிங்கத்தைப் போன்ற மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை புகுந்து வரக் கனாக் கண்டேன் தோழீ நான்.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

இந்திரன் உள்ளிட்ட தேவர்-குழாம் எல்லாம்

வந்திருந்து என்னை மகட் பேசி மந்திரித்து

மந்திரக் கோடி உடுத்தி மண-மாலை

அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழீ நான் (3)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

இந்திரன் முதலிய வானவர்களெல்லாரும் ‘நம்முடைய பெருமானுக்கு நடக்கப்போகிற கல்யாணம் ஹோக்ஸவத்தை நாமெல்லாருமாய்க் கூடியிருந்து காரியங்கள் செய்து நிறைவேற்றிவரவேணும்; என்று குதூஹலித்துத் தலையிலேகால் பாவிவந்து ‘இக்காரியம் முடிந்தாலன்றி நாங்கள் எழுந்திருப்பதில்லை‘ என்று பிடிவாதமாயிரந்து ‘எங்களபெருமானுக்கு உங்கள் பெண்ணை மணவாட்டியாக்கித் தரவேணும்‘ என்று பெரியதிரளிலே பிரார்த்தித்து, பிறகு உபவர்க்கத்தாரும் ரஹஸ்யமாகவிருந்து பூஷணபீதாம்பரங்கள் விஷயமாகவும் மற்றுமுள்ள ஸம்விதாநங்கள் விஷயமாகவும் ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளவேண்டியவற்றைக்காதோடு காதாகப்பேசி முடித்து, இனிக் காலவிளம்பம் செய்தால் ஏதாவது இடையூறு நேரிடக்கூடுமென்றெண்ணி அப்போதே, மணமகளுக்கு நாத்தனாரைக்கொண்டு புடவையுடுத்திகிறக்ரமத்திலே எனக்கு நாத்தனாரான துர்க்கையைக்கொண்டு புடவையுடுத்தி நன்மாலைகளையும் சூட்டுவித்து இப்படிப்பட்ட சில பாணிக்ரஹணபூர்வாங்கங்கள் நடைபெறக் கனாக்கண்டேனென்கிறாள்.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

நால்-திசைத் தீர்த்தம் கொணர்ந்து நனி நல்கி

பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்து ஏத்தி

பூப் புனை கண்ணிப் புனிதனோடு என்தன்னைக்

காப்பு-நாண் கட்டக் கனாக் கண்டேன் தோழீ நான் (4)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

எல்லாத் திசைகளிலிருந்தும் தீர்த்தம் கொண்டு வந்து பார்ப்பனர்களில் சிறந்தவர்கள் பல பேர் அதனை எடுத்து மந்திரங்களால் புகழ்ந்து, தாமரை மலர் மாலையை அணிந்திருக்கும் புனிதனுக்கும் எனக்கும் கையில் காப்புக் கயிறு கட்டக் கனாக் கண்டேன் தோழி நான்

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

கதிர்-ஒளித் தீபம் கலசம் உடன் ஏந்திச்

சதிர் இள மங்கையர் தாம் வந்து எதிர்கொள்ள

மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டு எங்கும்

அதிரப் புகுதக் கனாக் கண்டேன் தோழீ நான் (5)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

ஆடல் பாடல்களில் சிறந்த மங்கையர் கதிரவனைப் போல் ஒளிவீசும் தீபங்களையும் கலசங்களையும் ஏந்தி எதிர்கொண்டு அழைக்க வடமதுரையில் வாழ்பவர்களின் மன்னன் மணப்பந்தலின் நிலைப் படியினைத் தொட்டு எங்கும் மங்கல வாத்தியங்கள் அதிர உள்ளே புகுந்துவரக் கனாக் கண்டேன் தோழி நான்

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

மத்தளம் கொட்ட வரி-சங்கம் நின்று ஊத

முத்து உடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற் கீழ்

மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்

கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ நான் (6)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

மத்தளம் கொட்ட வரிகளுடன் கூடிய சங்குகள் முழங்க முத்து மாலைகளால் அலங்கரிக்கப் பட்ட பந்தலின் கீழ் என் தலைவன் அழகன் மதுசூதனன் வந்து என்னைக் கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழி நான்.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

வாய் நல்லார் நல்ல மறை ஓதி மந்திரத்தால்

பாசிலை நாணல் படுத்துப் பரிதி வைத்து

காய் சின மா களிறு அன்னான் என் கைப்பற்றி

தீ வலஞ் செய்யக் கனாக் கண்டேன் தோழீ நான் (7)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

நல்ல சொற்களையே பேசுபவர்கள் மேன்மையான மறைச் சொற்களைச் சொல்லி பச்சை இலைகளுடன் கூடிய நாணலைக் கதிரவன் முன் வைத்த பின், எரியும் நெருப்பைப் போல் கோப குணம் கொண்ட யானையைப் போன்றவன் என் கையைப் பற்றி தீயை வலம் செய்யக் கனாக் கண்டேன் தோழி நான்

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

இம்மைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் பற்று ஆவான்

நம்மை உடையவன் நாராயணன் நம்பி

செம்மை உடைய திருக்கையால் தாள் பற்றி

அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன் தோழீ நான் (8)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

இந்தப் பிறவிக்கும் இனி வரும் ஏழேழ் பிறவிக்கும் நமக்குக் கதியானவன், நம்மைத் தன் செல்வமாக உடையவன், நாராயணனாகிய நம் தலைவன், தன் செம்மையுடையத் திருக்கையால் என் கால்களைப் பற்றி அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன் தோழி நான்

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

வரிசிலை வாள் முகத்து என்னைமார் தாம் வந்திட்டு

எரிமுகம் பாரித்து என்னை முன்னே நிறுத்தி

அரிமுகன் அச்சுதன் கைம்மேல் என் கை வைத்துப்

பொரிமுகந்து அட்டக் கனாக் கண்டேன் தோழீ நான் (9)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

வில்லை கையில் ஏந்தியிருக்கும் ஒளிமிகுந்த முகம் கொண்ட என் உடன்பிறந்தோர் வந்து தீயினை வளர்த்து என்னை அதன் முன்னே நிறுத்தி சிங்கமுகம் கொண்ட (நரசிம்மன்) அச்சுதன் கைமேல் என் கை வைத்து பொரியை அந்த தீயினில் இடக் கனாக் கண்டேன் தோழி நான்.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

குங்குமம் அப்பிக் குளிர் சாந்தம் மட்டித்து

மங்கல வீதி வலஞ் செய்து மா மண நீர்

அங்கு அவனோடும் உடன் சென்று அங்கு ஆனைமேல்

மஞ்சனம் ஆட்டக் கனாக் கண்டேன் தோழீ நான் (10)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

குங்குமம் அப்பிக் குளிர்ந்த சந்தனக்குழம்பை உடலெங்கும் பூசி எங்கள் இருவரையும் நீராட்டிய பின், அங்கு அவனோடு யானை மேல் ஏறி மங்கல வீதி வலம் செய்யக் கனாக் கண்டேன் தோழி நான். மாதவனுடன் மணம் நடந்த மகிழ்ச்சியில் கோதைக்கு சொற்கள் முன்னும் பின்னுமாய் வருகின்றன. குங்குமம் அப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து மணநீர் மஞ்சனமாட்டி அங்கவனோடும் உடன் சென்று அங்கானை மேல் மங்கல வீதி வலம் செய்யக் கனாக் கண்டேன் என்று சொல்லாமல் இரண்டு நிகழ்ச்சிகளையும் ஒன்றில் ஒன்றாய்க் கலந்துச் சொல்கிறாள்.

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

ஆயனுக்காகத் தான் கண்ட கனாவினை

வேயர் புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதை சொல்

தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்

வாயும் நன் மக்களைப் பெற்று மகிழ்வரே (11)

# நாச்சியார் திருமொழி
# திருமணக் கனவை உரைத்தல்

ஆயனாரை அடைவதாகத் தான் கண்ட கனாவினை வேயர் புகழும் வில்லிபுத்தூர்க் கோன் பட்டர்பிரான் கோதை சொல்லும் இந்தத் தூய தமிழ் மாலை பத்துப் பாடல்களும் வல்லவர் பெறற்கரிய நல்ல பிள்ளைகளைப் பெற்று மகிழ்ந்திருப்பார்கள்.

# ஆண்டாள் பாசுரம்

கருப்பூரம் நாறுமோ?* கமலப் பூ நாறுமோ*

திருப் பவளச் செவ்வாய்தான்* தித்தித்திருக்குமோ*

மருப்பு ஒசித்த மாதவன் தன்* வாய்ச்சுவையும் நாற்றமும்*

விருப்புற்றுக் கேட்கின்றேன்* சொல் ஆழி வெண்சங்கே!*

# ஆண்டாள் பாசுரம்

கம்பீரமான ஹ்ருதயத்தையும் பரமசுத்தஸ்வபாவத்தை யுமுடைய சங்கே! உன்னை ஆசையோடு ஒருவிஷயம் கேட்கிறேன், சொல்லவேணும்; உனக்குத் தெரியாத அம்ஸித்தைப்பற்றி நான் கேட்கப்போகிறதாக நினைக்கவேண்டா, கண்ணபிரானது திருவதரத்தில் ஊறுகின்ற அமுதத்தின் ரஸபரிமங்களைக் குறித்துக் கேட்கிறேனித்தனையல்லது வேறிலை; அவ்வமுதமானது பரிமளத்திலே பச்சைக் கருட்பூரத்தை ஒத்திருக்குமோ, அல்லது தாமரைப்பூவை ஒத்திருக்குமோ? ரஸத்தில் த்ருஷ்டாந்தமாக எடுத்துக் குறிப்பிடக்கூடியவஸ்து யாதென்றும் எனக்கு ஸ்புரிக்கவில்லை; விலக்ஷணமான தித்திப்பை உடையதாயிருக்குமோ? எனக்குத் தெரியச் சொல்லவேணும் என்கிறாள். “கருப்பூரம் நாறுமோ“, “கமலப்பூநாறுமோ“ என்ற இரண்டிடத்திலும் உபமவுருபு தொக்கிக்கிடக்கிறது; கரும்பூரம்போல் நாறுமோ கமலப்பூப்போல் நாறுமோ என விரிக்க. சுவையும் நாற்றமும் - வாயினுடைய பரிமளத்தையும் வாயமுதத்தினுடைய ரஸத்தையும் என்க. ஆழிவெண்சங்கே = ஆழி என்று கடலுக்கும் பேராதலால், கடலில் நின்று தோன்றிய வெண்சங்கே! என்றுரைத்தலுமாம். (“வெண்சங்கே!.) கைவிடாதே அநுபவியாநிற்கச் செய்தேயும் உடம்பு வெளுக்கும்படியிறே இவனுடைய ஆற்றாமை“ என்ற வியாக்யான ஸ்ரீஸூக்தியின் அழகு காண்மின், சங்குக்கு வெண்மை இயற்கைக்குணமன்றுபோலும்,

# ஆண்டாள் பாசுரம்

கடலிற் பிறந்து கருதாது பஞ்சசனன்

உடலில் வளர்ந்துபோய் ஊழியான் கைத்தலத்*

திடரிற் குடியேறி* தீய அசுரர்*

நடலைப் பட முழங்கும்* தோற்றத்தாய் நற் சங்கே!*

# ஆண்டாள் பாசுரம்

சங்கே! நீ பிறந்ததெங்கே? போய்வளர்ந்ததெங்கே?, உப்புக்கடலிலேபிறந்து அசுரனுடைய உடலுக்குள்ளே போய்வளர்ந்தாய், இப்படி மட்டமான குலத்திலே பிறந்து வளர்ந்தவுனக்கு எம்பெருமானுடைய திருக்கைத்தலத்திலே நித்யவாஸம்பண்ணப்பெறுதலும், அவனுடைய திருவாயிலேயிருந்துகொண்டு அஸுரராக்ஷஸாதிகள் குடல்குழம்பும்படி கோஷம் செய்யப்பெறுதலும் வாய்ந்தது என்ன பாக்கியம்!, உன் வைலக்ஷண்யத்தை என் சொல்வேன்? என்கிறாள். கருதாது என்ற எதிர்மறை வினையெச்சம், குடியேறி என்றதில் அந்வயித்து, பிறந்தவிடத்தையும் வளர்ந்தவிடத்தையும் சிறிதும் ஸ்மரியாமல் அடியோடு மறந்து எப்போதும் எம்பெருமானது திருக்கைத் தலத்திலேயே குடிவாழ்ந்து என்று பொருள் தரும். இனி, “கருதாது பஞ்சசன னுடலில் வளர்ந்து“ என உள்ளபடியே அந்வயித்தலுமாம். பஞுசசன்னுடைய அஸுரத்தன்மையை (எம்பெருமானிடத்துப் பகைமைபூண்டவன் என்னுமிடத்தை) ப்பாராமல் அவனது உடலில் வளர்ந்து என்றபடி. ஊழியான் - என்றும் அழிவின்றி நெடுங்காலம் வாழ்பவன், யுகம்முடிந்த காலத்தும் தான்நின்று அனைவரையும் நோக்குமவன், காலத்துக்கு நிர்வாஹன் - எனப் பலபொருள்களுண்டு, எம்பெருமானுக்கு வாசகம். “கைத்தலத்திடர்“ - திடர் - உயர்ந்தஸ்தானம். நடலைப்படுதல் - துன்பமடைதலும் நடுக்கமடைதலும், “ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்“ என்ற கீதை இங்கு நினைக்கத்தக்கது தோற்றம் - மேன்மை.

# ஆண்டாள் பாசுரம்

தட வரையின் மீதே* சரற்கால சந்திரன்*

இடை உவாவில் வந்து* எழுந்தாலே போல்*

நீயும் வட மதுரையார் மன்னன்* வாசுதேவன் கையில்*

குடியேறி வீற்றிருந்தாய்* கோலப் பெருஞ் சங்கே!*

# ஆண்டாள் பாசுரம்

அழகிய சங்கே!. ஐப்பசி கார்த்திகை மாதங்களில் (சரற்காலம்) பௌர்ணமியன்று பெரிய மலையில் சந்திரன் உதயமாகி ஒளி விடுவது போல, வட மதுரை அரசன் கண்ணன் திருக்கையில் நீயும் குடி புகுந்து, நீ எனக்கு அவன் வாய்ச்சுவையைக் குறித்துக் கூற வேண்டும் (கண்ணனை விட்டு அகலாது எப்போதும் இருக்கும் பெருமை மட்டுமா இதற்கு உண்டு, அவன் வாய்ச்சுவை அறிந்த பெருமையும் அதற்குண்டு.

# ஆண்டாள் பாசுரம்

சந்திர மண்டலம் போல்*  தாமோதரன் கையில்*

அந்தரம் ஒன்று இன்றி*  ஏறி அவன் செவியில்*

மந்திரம் கொள்வாயே போலும்*  வலம்புரியே*

இந்திரனும் உன்னோடு*  செல்வத்துக்கு ஏலானே*.

# ஆண்டாள் பாசுரம்

சங்கை சந்திரமண்டலத்திற்கு ஒப்பாகப் பாடுகிறாள். கண்ணன் கையில் உள்ள சங்கு அவன் காதருகில் திகழ்வதால் ரகசியம் பேசுவதுபோல் இருக்கிறது என்கிறாள். இந்த பெருமை இந்திரனுக்குக் கூட கிடைக்காது என்று கூறுகிறாள். இந்தப் பாசுரத்தில் சங்கை சந்திரனுக்கும், காதருகில் விளங்குவது, ரகசியம் பேசுவது போல் உள்ளது என்கிற உவமையும் கூறி நம்மை வியக்க வைக்கிறாள்

# ஆண்டாள் பாசுரம்

உன்னோடு உடனே* ஒரு கடலில் வாழ்வாரை*

இன்னார் இனையார் என்று* எண்ணுவார் இல்லை காண்*

மன் ஆகி நின்ற* மதுசூதன் வாயமுதம்*

பன்னாளும் உண்கின்றாய்* பாஞ்சசன்னியமே!*

# ஆண்டாள் பாசுரம்

ஓ பாஞ்சசன்னியமே! நீ பிறந்தவிடத்தில் உன்னைப்போலப் பிறந்தவர்கள் எத்தனையோபேர்கள் இருக்கிறார்களன்றே, அவர்களை யாராவது நெஞ்சிலும் நினைப்பாருண்டா? அவர்களுடைய ஸ்வரூபம் இப்படிப்பட்டது, ஸ்வபாவம் இப்படிப்பட்டதென்று யாராவது அறிய விரும்பினாருண்டா? இல்லை, அப்படியிருக்க, உனக்கொருத்தனுக்கு மாத்திரம் வந்த வாழ்ச்சி என்னே!, கண்ணபிரானுடைய திருவாயிலமுதத்தை அல்லும் பகலும் அருந்துகின்றாயே! உன்னுடைய பாக்கியமே பாக்கியம் என்று கொண்டாடுகின்றாள். இன்னார் இனையார் - இன்ன உருவத்தை யுடையவர்கள், இன்ன இயற்கையையுடையவர்கள். "இன்னாரினியாரென்று" என்ற பாடமும் ஒருவாறு என்று பொருளாய், உன்னோடுடனே ஒருகடலில் வாழ்வாருடை நன்மைதீமைகளைப்பற்றிச் சிந்திப்பாராருமில்லை என்று கருத்தாகலாம். பாஞ்சசன்னியமே! - நான் பெரியாழ்வார்பாடே வளர்ந்தும் பயனற்றிராநின்றேன், நீ பஞ்சஜநாஸுரன்பாடே வளர்ந்தும் ஒப்பற்ற பயன்பெற்றிராநின்றாய், பிறப்பிலும் வளர்பிலும் என்ன இருக்கிறது? அத்ருஷ்டம் செவ்வனேயிருத்தல் வேண்டும், அஃது உனக்கு நன்கு அமைந்ததுகாண் - என்கிறாள் போலும்.

# ஆண்டாள் பாசுரம்

போய்த் தீர்த்தம் ஆடாதே* நின்ற புணர் மருதம்*

சாய்த்து ஈர்த்தான் கைத்தலத்தே* ஏறிக் குடிகொண்டு*

சேய்த் தீர்த்தமாய் நின்ற* செங்கண் மால்தன்னுடைய*

வாய்த் தீர்த்தம் பாய்ந்து ஆட வல்லாய்* வலம்புரியே!*

# ஆண்டாள் பாசுரம்

இந்நிலவுலகத்தின் புண்யதீர்த்தங்களிற் படித்து குடைந்தாடவேணுமென்னும் விருப்பமில்லாதாரில்லை; அங்ஙன் விருப்புற்றாரெல்லாரும் ஆயிரக்காதம் ஐங்நூறுகாதம் வழிநடந்துபோய் ஒருகுளத்திலும் குட்டையிலும் முழுக்கிட்டு வருவர்கள்; ஒரு தடவை புண்யதீர்த்தத்திற் பாய்ந்தாடுவதற்கு எல்லாரும் படாப்பாடுகள் படாநிற்க; பாஞ்சசன்னியமே! நீ அப்படிப்பட்ட வருத்தமொன்றும் படாமல் எம்பெருமானுடைய திருக்கைத்தலத்திலேயே எளிதாகக் குடியிருந்துகொண்டு அவனுடைய வாயமுதமாகிற லோகோத்தரமான புண்யதீர்த்தத்திலே ஸர்வகாலமும் அவகாஹித்திருக்கின்றாயே!, உனது அத்ருஷ்டமே அத்ருஷ்டம் - என்று கொண்டாடுகின்றாள். “வலம்புரியே! (நீ மற்றவர்களைப்போல்) போய் தீர்த்தமாடாதே - செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்“ என்று அந்வயக்ரமம். சேய்த்தீர்த்தமாய் நின்ற என்ற அட்மொழி செங்கண்மாலுக்கு மாகலாம், செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தத்துக்குமாகலாம். சேய்த்தீர்த்தம் என்றது - நெடுந்தூரத்திலுள்ள தீர்த்தமென்றபடியாய், அதனால் அருமை காட்டப்பட்டதாய், அதனால் மிக்கசிறப்பு காட்டப்பட்டதாமென்க.

# ஆண்டாள் பாசுரம்

செங்கமல நாள் மலர்மேல்* தேன் நுகரும் அன்னம் போல்*

செங்கண் கருமேனி* வாசுதேவனுடைய*

அங்கைத் தலம் ஏறி* அன்ன-வசஞ் செய்யும்*

சங்கு-அரையா! உன் செல்வம்* சால அழகியதே!*

# ஆண்டாள் பாசுரம்

அப்போதலர்ந்த செந்தாமரை மலரின்மேலே அன்னம் படிந்து மதுபாநம் பண்ணுமாபோலே கண்ணபிரானுடைய அழகிய திருக்கையின்மேலேறி மதுபாநம் பண்ணி உணவுக்கீடாக உறக்கங்கொள்ளுகிற திருச்சங்கே! உன் போகத்தின் பெருமையை நான் என்னசொல்வேன் என்கிறாள். வெண்மைநிறத்தில் ஸாம்யத்தைக்கொண்டு சங்கை அன்னத்தோடு ஒப்பிட்டாள். அங்கைத்தலமானது செங்கமல நாண்மலரோடு ஒப்பிடப்பட்டது. செங்கமலநாண்மலரில் மது உள்ளமையால் அதனை அன்னம் பருகுவதுண்டு, இங்குச் செங்கமலமலராகச் சொல்லப்பட்ட திருக்கையில் மது இல்லையே, திருவாயில்தானே மது உண்டு. “அங்கைத்தலமேலி“ என்றிருக்கையாலே இந்த உபமாநோபமேயபாவம் எங்ஙனேபொருந்தும்? என்று சிலர் சங்கிப்பர்கள், - அன்னமானது செங்கமல நாண்மலரின்மேல் இருந்துகொண்டு தேனேநுகர்வது போல் - என்று விவக்ஷிதமாகக் கொண்டால் இந்தஸிங்கைக்குப் பரிஹாரமாகும். செங்கமலநாண்மலரிமேல் அன்னத்தின் இருப்புக்கும் வாசுதேவனுடைய அங்கைத்தலத்தில் சங்கின் இருப்புக்கும் உபமாநோபமேயபாவம் விவக்ஷிதமென்க.

# ஆண்டாள் பாசுரம்

உண்பது சொல்லில்* உலகு அளந்தான் வாயமுதம்*

கண்படை கொள்ளில்* கடல்வண்ணன் கைத்தலத்தே*

பெண் படையார் உன் மேல்* பெரும் பூசல் சாற்றுகின்றார்*

பண் பல செய்கின்றாய்* பாஞ்சசன்னியமே!*

# ஆண்டாள் பாசுரம்

ஓ பாஞ்சசன்னியமே! நீ செய்வது சிறிதும் நியாயமாயில்லே, பெண்ணாய்ப் பிறந்தவர்களெல்லாரும் உன்மேல் வசைகூறும்படியான காரியம் நீ செய்கிறாய், அது என்னவென்றால், நீ கண்ணபிரானுடைய வாயமுதத்தை உண்பதும் அவனுடைய கைத்தலத்தில் உறங்குவதுமாயிருக்கிறாய், கோவில் சோற்றைத்தின்று குளத்தில் நீரைக்குடித்துக் கோபுறவாசலிற் கிடந்துறங்குவார்க்குப்போலே உனக்கும் பகவத்ஸம்பந்தம் ஒரு நொடிப்பொழுதும் இடையறாதிருக்கின்றது, இப்படி எம்பெருமானோடேயே ஸதாபோது போக்கவேணுமென்று ஆசைப்பட்டிருக்கிற பல்லாயிரம் பெண்களை வயிறெரிந்துநிற்கவிட்டு நீயொருவனே இப்படிப் போதுபோக்குவதானது நியாயமேயல்ல, ‘இப்பாவி இப்படி அநியாயம்செய்கிறானே‘ யென்றுமுறை யிடாதாரில்லைகாண் என்கிறாள். கண்படை - உறக்கம், பெண்படையார் - திரள்திரளாயுள்ள பெண்கள் என்றபடி, திருவாய்ப்பாடியிலுள்ளாரும் ஸ்ரீமதுரையிலுள்ளாரும். பூசல் - பேரொலிசெய்தல். பண்பல - பண்பு அல-, பண்பு - நியாயம், அல-அல்ல - அல்லாத்து, நியாயமல்லாதது அநியாயம். பகவத் விஷயத்தில் அவகாஹித்தவர்கள் “***“ (ஏகஃஸ்வாதுநபுஞ்ஜீத) (இன்னிகனிதனியருந்தான்) என்றபடி மற்றும் ருசியுடையாரையுங் கூட்டிக்கொண்டு திரளாக விருந்து அநுபவிக்கவேண்டியிருக்க, நீ ஏகாகியாய் அநுபவித்து அநீதியென்க.

# ஆண்டாள் பாசுரம்

பதினாறாம் ஆயிரவர்* தேவிமார் பார்த்திருப்ப*

மது வாயிற் கொண்டாற்போல்* மாதவன் தன் வாயமுதம்*

பொதுவாக உண்பதனைப்* புக்கு நீ உண்டக்கால்*

சிதையாரோ உன்னோடு* செல்வப் பெருஞ்சங்கே!*

# ஆண்டாள் பாசுரம்

பெருஞ்செல்வம் படைத்த சங்கே! நீ அல்லும்பகலும் உண்கிற கண்ணபிரான் தன் வாயமுதமானது உனக்கொருவனுக்கே உரிமைப்பட்டதன்று, அக்கண்ணபிரானுக்கு வாழ்க்கைப்பட்ட பதினாறாயிரம் பெண்கள் இவ்வமுதத்தைப் பருகுவதற்குப் பங்குடையவர்கள். அன்னவர் இதனை அநுபவிக்க அவஸரம் பார்த்திருக்க நீ ஒருவனே மேல்விழுந்து புஜித்தால் அவர்கள் உன்னோடு பிணங்காதிருக்கமுடியுமோ? அவர்களுடைய மனவருத்தத்திற்கு நீ ஆளானாயாகில் உன்னை ஸாதுகோஷ்டியில் மதிப்பாருண்டோ? என்கிறாள். நரகாசுரன் தான் மணஞ்செய்து கொள்ளவேணுமென்று அங்கங்கிருந்து தெரிந்து பொறுக்கிக்கொண்டு வந்து திரட்டிவைத்திருந்த கன்னிகைகள் பதினாறாயிரம் பேரையும் கண்ணபிரான் அவ்வசுரனைக் கொன்றொழித்துத் தானே மணஞ்செய்துகொண்டான் னென்பது அறியத்தக்கது.

# ஆண்டாள் பாசுரம்

பாஞ்சசன்னியத்தைப்* பற்பநாபனோடும்*

வாய்ந்த பெருஞ் சுற்றம் ஆக்கிய* வண்புதுவை*

ஏய்ந்த புகழ்ப் பட்டர்பிரான்* கோதை தமிழ் ஈரைந்தும்*

ஆய்ந்து ஏத்த வல்லார்* அவரும் அணுக்கரே*.

# ஆண்டாள் பாசுரம்

இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லி முடிக்கிறாள் இதில், ஸ்ரீ பாஞ்ச ஜந்யத்தை நோக்கி “மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்“ என்றமையால் இச்சங்குதான் எம்பெருமானுக்குக் கிட்டின வுறவுடையது என்று ஆண்டாளுடைய கருத்தாயிருந்தது, அதுதோன்ற அருளிச்செய்கிறாள் - “பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனொடும் வாய்ந்தபெருஞ்சுற்றமாக்கிய“ என்று நெருங்கின பந்துத்வ முடையதாகக் கொண்டு சொன்ன என்றபடி. ஆக்கிய என்ற அடைமொழி கோதைக்குமாகலாம். கோதை தமிழ்க்குமாகலாம். “ஏய்ந்தபுகழ்“ என்ற அடைமொழி பட்டர்பிரானிடத்து அந்வயிக்கத்தகுமாயினும் கோதையிடத்து அந்வயித்தருளினர் பெரியவாச்சான்பிள்ளை. தமிழ் - தமிழாலாகிய பாசுரங்கட்டு ஆகுபெயர். ஆய்ந்து ஏத்தவல்லா ரவரும் - இத்திருவாய்மொழி முழுவதும் பாஞ்சஜந்யத்தைப் பற்றிச் சொல்லிற்றேயன்றி எம்பெருமானைப்பற்றி இதில் ஒன்றுமில்லையேயென்று கருதிவிடாமல் இதுவும் எம்பெருமானுடைய பெருமையில்தான் சென்று முடிகின்றதென்று ஆராய்ந்து அநுஸ்திக்கவல்லவர்கள் என்றபடி. எம்பெருமானுடைய திருவாயமுகத்தின் இனிமையும் அவனுடைய ஆச்ரிதபக்ஷபாதமும் இத்திருமொழியில் விளங்கக்காண்க. அணுக்கர் - அன்புடையார், அந்தரங்கர்.

